முத்தமிழ் விரும்பியின்



# கவிதையில் காதல்

Content Analysis of 'Love' theme in the Poems of Muththamizh Virumbi

முனைவர் செ.இராஜேஸ்வரி



சந்திரோதயம் பதிப்பகம், மதுரை.

**முத்தமிழ் விரும்பி**யின்

# கவிதையில் காதல்

**Content Analysis of 'Love' theme in the Poems of Muththamizh Virumbi**

**முனைவர் செ. இராஜேஸ்வரி,** M. A., M.Phil., Ph.D.,

*சந்திரோதயம் பதிப்பகம்*

*மதுரை – 625 018*

**நூல் விவரம்**

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | முத்தமிழ் விரும்பியின் கவிதையில் காதல் |
| துறை | : | கவிதைத் திறனாய்வு |
| ஆசிரியர் | : | முனைவர் செ. இராஜேஸ்வரி |
| வடிவமைப்பு | : | செ. மீனாட்சி |
| பதிப்பாளர் | : | சந்திரோதயம் பதிப்பகம்<br>3/422, தினமணி நகர்.<br>மதுரை – 625 018<br>தொலைபேசி எண் : 7010997639 |
| மறுபதிப்பு | : | டிசம்பர் 2020 |
| மொழி | : | தமிழ் |
| பக்கங்கள் | : | 137 |
| விலை | : | Rs.100/- |

- - - - -

| | | |
|---|---|---|
| *Title* | : | *Muththamizh Virumbi yin Kavithaiyil Kadhal* |
| *Subject* | : | *Poetry Criticism* |
| *Author* | : | *Dr.C.Rajeswari, M.A., M.Phil., Ph.D.,* |
| *Cover Design* | : | *C. Meenatchi* |
| *Publisher* | : | *Chandrothayam Pathippagam*<br>*3/422, Dinamani Nagar*<br>*Madurai – 625 018*<br>*Phone : 7010997639* |
| *Reprint* | : | *December 2020* |
| *Pages* | : | *137* |
| *Price* | : | *Rs.100/--* |

## பொறிஞர் கவிஞர் முத்தமிழ் விரும்பி



பொறிஞர் கவிஞர், கட்டுரையாளர், பாடலாசிரியர், நாடக நடிகர், குறும்பட நடிகர், திரைப்பட நடிகர், ஆவணப்பட இயக்குனர், சிறுகதையாளர், நாவலாசிரியர், நாடகாசிரியர், இலக்கியச் செயல்பாட்டாளர், திரைக்கதையாசிரியர், வசனகர்த்தா, இயக்குனர், சொற்பொழிவாளர், விமர்சகர் முத்தமிழ் விரும்பி தஞ்சை மண்ணை சேர்ந்தவர். கோவை பி.எஸ்.ஜி தொழில்நுட்ப கல்லூரியில் பொறியியல் படித்தவர். திருச்சி பெல் நிறுவனத்தில் துணை இயக்குனராக பணியாற்றி வருகிறார்.

நெருஞ்சி இலக்கிய இயக்கத்தை நிறுவி ஆண்டுதோறும் கவிஞர் பத்திரிகையாளர் எழுத்தாளர் எனப் பல துறை சார்ந்தவர்களுக்கும் விருதுகள் வழங்கிச் சிறப்பித்து வருகிறார்.

நெருஞ்சி என்னும் காலாண்டு இலக்கிய இதழை நடத்திவருகிறார். தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக்கழகத்தின் கல்வி குழு உறுப்பினர் ஆவார். கோவை பாரதியார் பல்கலைக்கழகத்தின் முன்னாள் ஆட்சி மன்றக் குழு உறுப்பினரும் ஆவார்.

கவிஞருடைய **பூ மர நிழல், திட்டிவாசல் பெண்ணொருத்தி, உன்னோடு உரையாடுதல், காதல் மொழி, பார்வையில் பூத்த நிலா, தேனடையும் வரலாறு** ஆகிய கவிதை நூல்கள் ஆங்கிலத்தில் *Shade of the* ***Flowing Tree, Songs of Dryness, Speaking with You, The Language of Love, A Lady at the Little Gate, Honey Hive*** முனைவர் செ.

*ராஜேஸ்வரி அவர்களால் மொழி பெயர்க்கப்பட்டு, சென்னை எமெரால்டு பதிப்பகத்தாரால் வெளியிடப்பட்டுள்ளன.* ***"Ambrosial Kiss"*** *என்ற மொழிபெயர்ப்புக் கவிதை திறனாய்வு நூல் ஒன்றையும் எமெரால்டு பதிப்பகம் வெளியிட்டுள்ளது.*

*கவிஞருடைய கவிதைகள் குறித்து* ***"பூமர நிழலின் களமும் காலமும், முத்தமிழ் விரும்பியின் பாடுபொருளும் பாசப்பொருளும், '2020 தை மாதத்தில் இன்று' கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு, கவிதையில் காதல், முத்தமிழ் விரும்பியின் கவித் திறன்"*** *ஆகிய திறனாய்வு நூல்களை மதுரை, சந்திரோதயம் பதிப்பகம் வெளியிட்டுள்ளது.*

*கவிஞருடைய பூமர நிழல் கவிதைத் தொகுப்புக்கு* ***'கவிதை உறவு 2004'*** *முதற் பரிசு வழங்கியது. மேலும் தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம் மற்றும் நியு செஞ்சுரி புத்தக நிறுவனம் இணைந்து நடத்திய '****பாரதி விழா 2004'*** *பரிசுப் போட்டியிலும் பரிசு பெற்றது.*

*கவிஞர் கடற்குதிரை பதிப்பகத்தின் மூலமாக "****காற்று வரைந்த ஓவியம்*** *– கவிஞர் பேராசிரியர். சிற்பி பாலசுப்ரமணியம்,* ***காதல் சொல்ல*** *– நித்யன் மணியரசு,* ***மிதக்கும் காடு*** *– தென்பாண்டியன்,* ***நிறமாறிய தூரிகை*** *– பா. மீனாட்சி சுந்தரம்,* ***வெற்றி*** *– தி.ரா.நமசிவாயம்,* ***பாரதி முதல் கனிமொழி வரை*** *– பேராசிரியர். தே. ஞானசேகரன்,* ***மாயப் பூவெளி*** *– கவிஜீவன்,* ***பருந்துகளை போலான தேன் சிட்டுகள்*** *– பண். இறை,* ***பெரியார் பார்வையில் திருக்குறள்*** *– திருக்குறள் எஸ்.சோமசுந்தரம், Another Portrait of the Brush – Tamil Poem translated by Ba. Mee., Thirukkural – A translation in Santali Language by Rev.Fr.V.Richard, and பண்பாட்டு நகர்வுகள், (வெளியீடு – நெருஞ்சி இலக்கிய இயக்கம், தஞ்சை.) ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார்.*

மலேசியாவில் மலாய் பல்கலைக்கழகத்தில் நடந்த விழாவில் கவிஞருக்குத் **தமிழ் இலக்கியச் செம்மல்** என்ற விருது வழங்கப்பட்டது. இலங்கையில் யாழ்ப்பானம் பல்கலைக்கழகம் கவிஞருக்கு **'திருவள்ளுவர் விருது'** வழங்கி சிறப்பித்துள்ளது.

கவிஞருடைய, நேற்றின் பாதங்கள், தஞ்சை பெருவுடை நிலம் ஆகிய கவிதை நூல்கள் விரைவில் அச்சில் வெளி வரவிருக்கின்றன இவ்விரு கவிதைத் தொகுப்புகளும் கட்டுரைகளும் விரைவில் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட இருக்கின்றன.

கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதைகளை கோவை பாரதியார் பல்கலைக்கழகத் தமிழ்த் துறையும் கொங்கு கலை அறிவியல் கல்லூரி போன்ற வேறு சில தன்னாட்சி கல்லூரிகளும் பாடமாக வைத்துள்ளன. தமிழ் ஆராய்ச்சியாளர்கள் கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் ஆய்வுகள் மேற்கொண்டுள்ளனர்.



## *அணிந்துரை*

**முனைவர் தே. ஞானசேகரன்**

*பேராசிரியர் மற்றும் தலைவர்*
*தமிழ்த்துறை*
*பாரதியார் பல்கலைக்கழகம்*
*கோயம்புத்தூர்-641046.*

# காதல் உள நூல்

*காதல் விந்தையான உணர்வு. வியப்பான அனுபவம். இந்த உலகம் இயங்குவதே ஆண், பெண் காதலால்தான் என்றும் சொல்லப்படுகின்றது. இது உண்மைதான். கவியரசு வைரமுத்துவின் வரிகளில் சொல்வதென்றால் **"காதல் மட்டும் இல்லையின்னா பூமியிங்கு சுத்தாது"** தான். காதலைப் பாடாத கவிஞர்களும், இலக்கியங்களும் உலகில் எங்குமே காணமுடியாது. காதல் எப்போதும் ஒரு விருப்பத் தேர்வுதான். ஆனாலும்கூட ஆண், பெண் உறவின் உளவியல் மாற்றங்களை இப்படியானதுதான் என்றும் வரையறுத்து விடவும் முடியாது. கண்ணை மூடிக் கொண்டே பார்க்கவும், நடந்து கொண்டே பறக்கவும், பறந்து கொண்டே மிதக்கவும் காதல் மனதால் மட்டுமே முடியும். இது மரபு ரீதியாக வடிவமைக்கப்பட்ட உள்ளுணர்வு சார்ந்த புணர்ச்சி நடத்தை. ஒரு மனச்சாயல். அதுதான் காதலை அர்த்தமுள்ளதாக்குகிறது. அதிகாரம் செலுத்தி நம்மால் அன்பையோ அல்லது காதலையோ பெறமுடியாது. அடுத்தவரால் நேசிக்கப்பட வேண்டும் என்ற விருப்பம்தான் மனிதகுலம் தழைத்திருப்பதற்கான ஜீவ ஆதாரமாகும். அத்தகையத் தேவைகளைப் பூர்த்தி செய்ய வடிவமைக்கப்பட்டதுதான் காதலும் திருமணமும் ஆகும். திருமணத்திற்குப் பின் ஆணும் பெண்ணும் ஒரே*

சதையாக மாறிவிடுவதாகச் சொல்லப்படுகிறது. இரண்டு உயிர்களும் ஓர் உயிராகின்றன. இந்த இரு உயிர்கள் ஒன்றுடன் ஒன்று சேரத் துடிக்கும் பரிதவிப்புதான் காதல் என்று சொல்லப்படுகின்றது. காதல் சொல்லும் போதும் சுகம், காதலில் விழுவதும் சுகம், காதலராக வாழ்வதும் சுகம். இது எல்லோருக்கும் எளிதில் கை கூடுவதில்லை. கைகூடியவர்கள் அதிஷ்டசாலிகள். கைகூடாதவர்கள் சபிக்கப் பெற்றவர்கள். காதல் எப்போதும் சுகமான உணர்வுதான். அதனால்தான் காதலால் மானுடம் தழைக்குமென்று பாடினான் மகாகவி பாரதி. காதலில்லா உலகில் மானுடம் செழிக்காது.

இந்த நூல் ஒரு வகையில் ஆண், பெண் இருவரின் மனதை கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதைகளைக் கொண்டு ஆராய்கின்றது. மனித வாழ்வின் மிகப்பெரிய சிக்கலாக இருப்பது பெண்ணின் மனநிலையை ஆண் புரிந்து கொள்ள முடியாததுதான். ஆணைப் போன்று பெண் ஒரு விஷயத்தை நேரடியாகப் பேசுவதில்லை. அவள் மனதில் என்ன இருக்கின்றது என்பதைப் புரிவதில் ஆண் வர்க்கம் காலங்காலமாய் கஷ்டப்பட்டே வந்திருக்கின்றது. உடலளவில் ஆண் வேறு, பெண் வேறு என்பதோடு, உளவியல் அடிப்படையிலும் ஆணும் பெண்ணும் வேறு வேறுதான். இந்த வேறுபாடுகளை இருவரும் சரியாகப் புரிந்து கொள்ளும் நிலை அவர்களின் உள்ளத்தில் உள்ளது. இந்த உள்ளம் தொடர்பானதைத்தான் தொல்காப்பியர் அகத்திணை என்பார். அகத்திணை என்பதற்கு உள்ள ஒழுக்கம் என்று பெயர். அக இலக்கியத்தில் தலைவன் தலைவியின் அக ஒழுக்கம் பேசப்படுகிறது. இந்த நூலில் இடம்பெற்றுள்ள முதல் இயலான கவிதைகளில் காதல் சிறப்பு எனும் இயல் தொல்காப்பியம் முதல் முத்தமிழ் விரும்பியின் கவிதை வரை இடம்பெற்றுள்ள காதல் சிறப்பை ஆராய்கின்றது. இந்த இயல் காதல் என்றால் என்ன? அதன் வகைகள் எத்தனை என்பது வரை விரிவாக

விளக்குகின்றது. மேலும் இந்த நூல் ஒருவகையில் ஆண், பெண்ணின் மனதை ஆராயும் உளவியல் நூல் போன்றுள்ளது என்றால் மிகையன்று.

## ஆண் - பெண் உளவியல் வேறுபாடு

பொதுவாகவே ஆண்கள் பெண்ணிடம் தான் வாக்குக் கொடுத்தபடி நடக்காத போது; பெண் ஊடல் கொள்கிறாள். அந்தப் பொய்யான கோபம் அக வாழ்வில் சுவையூட்டுமென்றாலும் சில நேரங்களில் இவை நீட்டிக்கப்படும் போது அதனைத் தீர்க்கத் தோழி போன்ற வாயில்கள் தேவை என்று நம்முன்னோர் கருதியதே வாயில்கள் என்ற கருத்தாக நாம் கருத முடிகிறது. ஆண் தன்னால் ஒன்றைச் சொல்லியபடி செய்ய முடியாத போது பொய்யைத்தான் அவனால் சொல்ல முடிகிறது. இந்த ஆண் உளவியல் பற்றி ஆலன் & பார்பரா பீஸ் *(Allan & Barbara Peace)* ஆண்கள் ஏன் பொய் சொல்கிறார்கள், பெண்கள் ஏன் அழுகிறார்கள் *(Why men lie, women cry)* என்ற நூலில் ஆண், பெண் வேறுபாடு குறித்து நிறையப் பேசுகிறார்கள். இந்நூலில் இடம்பெறும் கருத்துக்கள் ஆண், பெண் உளவியலைப் புரிய நமக்கு உதவும். இவற்றில் சில வருமாறு.

ஆண்கள் தாங்கள் எடுக்கும் எந்த முயற்சியிலும் தோல்வியடையும் நிலையை அடைவதற்குத் தயாராக இல்லாதபடி அவர்களின் மூளை வடிவமைக்கப்பட்டுள்ளது. வேட்டையாடி உணவுடன் வருவேன் அவனைச் சண்டையில் ஜெயிப்பேன். உன்னைக் கண் கலங்காமல் காப்பாற்றுவேன். என்னால் செய்ய முடியாதது எதுவும் இல்லை என்றெல்லாம் பேசும் படியாகவே அவர்கள் பரிணமித்துள்ளனர். அவர்களால் தோல்வி என்பதை நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. வானத்தை வில்லாக வளைப்பேன், மணலைக் கயிறாகத் திரிப்பேன், உனக்காக உயிரையும் விடுவேன் என்றெல்லாம் பேசுவார்கள்.

இவையெல்லாவற்றிலும் உண்மையிருக்காது. இருப்பினும் ஆணுக்கு இது தேவையாயிருக்கின்றது. அவனால் முடியாத போது பொய் கூறும்படிதான் அவன் மூளை வடிவமைக்கப்பட்டுள்ளது. நூறு வாக்குறுதி கொடுத்து ஒன்றைக்கூட நிறைவேற்றாவிட்டாலும் 101வது வாக்குறுதி கொடுக்க ஆணின் மூளை யோசிப்பதில்லை. பெண்ணைச் சமாளிக்க அவன் பொய் சொல்லித்தான் ஆக வேண்டும். அவனுக்கு வேறு வழியில்லை. எனவே அவன் பொய் சொல்கின்றான்.

## ஆண் - பெண் வேறுபாடுகள்

| ஆண் | பெண் |
|---|---|
| ஆண்கள் வேட்டையாடுபவர்களாகவும், விரட்டுபவர்களாகவும், பாதுகாப்பவர்களாகவும் பொருள் ஈட்டித் தருபவர்களாகவும் வடிவமைக்கப்பட்டுள்ளனர். | பெண்கள் குழந்தை பெறுபவர்களாகவும் தமது கூடுகளைக் காப்பாற்றுபவர்களாகவும் பரிணமித்து உருவெடுத்துள்ளனர். |
| ஆண்கள் ஒரு நாளைக்கு 2000 முதல் 4000 வரை சொற்களைப் பேச முடியும். | பெண் ஒரு நாளைக்கு 6000 முதல் 8000 வரை சொற்களைப் பேச முடியும். |
| ஆண்களின் மூளைகள் தீர்வை மையம் கொண்டவை. | பெண்களின் மூளைகள் செயல்பாட்டை மையம் கொண்டவை. |
| ஆண்கள் பேசுவது பிரச்சனைகளைத் தீர்ப்பதற்காக மட்டுமே. | ஒரு பெண் பேசுவதற்கான முக்கியக் காரணம் பேசுவது மட்டுமே. |
| ஆண்களால் ஒரு சமயத்தில் ஒரே ஒரு செயலை மட்டுமே செய்ய முடியும். | பெண்களால் ஒரே சமயத்தில் பல வேலைகளைச் செய்ய முடியும். |

| ஆண்களுக்குக் காமம் தேவை. | பெண்களுக்குக் காதல் தேவை. |
|---|---|
| ஆணின் உலகம் சண்டைகளாலும், சாவுகளாலும் நிறைந்திருக்கின்றது. | பெண்ணின் உலகம் கருணையாலும், அன்பாலும் நிறைந்திருக்கின்றது. |
| ஆண்கள் வேலையை மதிப்பவர்கள். | பெண்கள் உறவை மதிப்பவர்கள். |
| உணர்ச்சிவசப்பட்ட ஆண் பாம்பு போல் சீறி விடுவான். | உணர்ச்சிவசப்பட்ட பெண் நிதானமாக அதைப் பற்றிப் பேசுவதையே விரும்புவாள். |
| ஒரு ஆண் தன் வேலையில் சந்தோசமின்றி இருந்தால் அவனால் தன் உறவுகளில் கவனம் செலுத்த முடியாது. | ஒரு பெண் தன் உறவுகளில் சந்தோசமின்றி இருந்தால் அவளால் தன் வேலையில் கவனம் செலுத்த முடியாது. |
| காமத்தில் ஆண் காலியாக்க விரும்புகின்றான். | பெண் நிரப்பிக் கொள்ள விரும்புகிறாள். |

இப்படியாக ஆண் பெண் வேறுபாடுகள் குறித்துப் பேசும் நூலின் இறுதியில் இப்படிச் சொல்லப்பட்டுள்ளது.

பெருமளவு பால்வேறுபாடுகள் இருந்தாலும் ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையே உறவுகள் நன்கு மலர்கின்றன. இதற்குப் பெரும்பாலான காரணம் பெண்களே. காரணம் உறவையும் குடும்பத்தையும் நிர்வகிக்க வேண்டிய திறமைகள் அவர்களிடம் உள்ளன. பேச்சிற்கும் நடத்தைக்கும் பின்னுள்ள உள்காரணத்தைக் கண்டறியும் திறமை அவர்களிடம் இருப்பதால், அவர்களால் விளைவுகளை முன்கூட்டியே கூறமுடியும். பிரச்சனைகளைத் தவிர்க்க முன்னேற்பாடுகளைச் செய்ய

முடியும். இதனால் ஒவ்வொரு நாட்டின் தலைவராகவும் ஒரு பெண் இருந்தால் உலகமே பாதுகாப்பான இடமாகிவிடும். உணவைத் தேடவும், வீட்டிற்குத் திரும்பிச் செல்லும் வழியைக் கண்டறியவும், கணப்பை வெறிக்கவும், சந்ததியை உற்பத்திச் செய்யவும் மட்டுமே ஆண்கள் இலாயக்கு. பெண்களைப் போலவே நவீன காலத்தில் வாழத் தேவையான புதிய வழிகளை அவர்கள் கற்றுக் கொண்டே தீர வேண்டும்.

தாங்கள் உயிரியல் ரீதியாக வேறுபட்டவர்கள் என்பதை ஆணும் பெண்ணும் ஏற்றுக்கொள்ள மறுக்கும்போது அடுத்தவர் தங்கள் எதிர்ப்பார்ப்பிற்கேற்ப நடந்து கொள்ள வேண்டும் என்று எதிர்பார்ப்பதாலும்தான் உறவுகளில் சிக்கல்கள் வருகின்றன. உறவுகளில் நாம் அனுபவிக்கும் மன அழுத்தங்களில் பெரும்பகுதி ஆணும் பெண்ணும் சமம். அவர்கள் இருவருக்கும் ஒரே முக்கியத்துவங்கள், உந்தல்கள், ஆசைகள் இருக்கின்றன என்ற மெய்யான நம்பிக்கையினாலேயே ஏற்படுகிறது.

மனித சரித்திரத்தில் முதல்முறையாக ஆணையும் பெண்ணையும் நாம் ஒரே வழியில் வளர்க்கிறோம். படிக்க வைக்கிறோம். அவர்கள் இருவரும் ஒன்றே. இருவரின் தகுதிகளும் ஒன்றுதான் என்று கற்றுத் தருகிறோம். பிறகு அவர்கள் வளர்ந்தபின் திருமணமாகி ஒரு நாள் அவர்கள் கண்விழிக்கும் போது எல்லா வழிகளிலும், வடிவங்களிலும், அமைப்புகளிலும் இருவரும் வேறுவேறு என்பதை உணர்கிறார்கள். இதனால் இளைஞர்களின் உறவுகளும் திருமண வாழ்வும் பரிதாபமான நிலையில் இருக்கின்றன. ஆணும் பெண்ணும் ஒன்றே என்று கூறும் எந்தக் கொள்கையும் அபாயகரமானதே. காரணம் வேறுபட்ட மூளை அமைப்புள்ள ஆணும் பெண்ணும் ஒரே மாதிரி நடந்து கொள்ள வேண்டும் என்று அது நிர்பந்திக்கிறது. சில சமயம் ஏன் ஆணுக்கும் பெண்ணுக்கும்

இடையே இப்படி ஒரு பொருத்தமின்மையை இயற்கை உருவாக்கியது என்று புரியாமல் குழம்புகிறோம். ஆனால் இப்படி தோன்றுவதற்கு காரணம் நமது உயிரியல் இன்றைய சூழலோடு முரண்படுவதுதான். இந்த வேறுபாடுகளின் மூலக்காரணத்தை நீங்கள் புரிந்து கொண்டுவிட்டால், இவற்றோடு வாழ்வது உங்களுக்கு எளிதாவது மட்டுமின்றி, அவற்றை நீங்கள் நிர்வகிக்கலாம், பாராட்டலாம், சந்தோசப்படலாம். இந்தப் புரிதலை இந்த நூல் தனக்கான தனித்தன்மையுடன் மிக விரிவாகச் சொல்லியுள்ளது என்பது என் கருத்து.

பெண்கள் ஏன் நிறையப் பேசுகிறார்கள். இவர்களுக்கு ஈடுகொடுத்து ஆண்களால் ஏன் பேச முடியவில்லை. பெண்களால் ஒரே நேரத்தில் பல வேலைகளைச் செய்ய முடிகிறது. ஆனால் ஆண் ஒரு நேரத்தில் ஒரு வேலையை மட்டுமே செய்ய முடியும். காதலையும் அன்பையும் எதிர்பார்த்தே ஒரு பெண் ஒரு ஆணுடன் நட்புக் கொள்கின்றாள். ஆனால் ஆண்கள் காமத்திற்காகவே ஓர் உறவில் நுழைகிறார்கள். பிறகுதான் உறவின் சாத்தியங்களை ஆராய்கின்றார்கள். ஆண், பெண் உறவில் பெண் காதலையும் அன்பையுமே கூடுதலாக எதிர்பார்க்கின்றாள். ஆனால் ஆணுக்கு அதற்கான நேரம் இல்லை. ஆணின் மூளை வினையாற்றுவதில் (வேலை செய்தல்) அதாவது உணவு சேகரித்தல், வேட்டையாடுதல், பொருள் தேடுதல் என்று வடிவமைக்கப்பட்டுள்ளது. ஆண்களில் எண்பத்தேழு சதவிகிதத்தவர் தங்கள் வாழ்வில் வேலைதான் மிக முக்கியமானது என்ற எண்ணமுடையவர் ஆவர். இதனை **“வினையே ஆடவர்க்கு உயிர்”** என்றும், **“உத்தியோகம் புருஷ இலட்சணம்”** என்றும் நாம் இலக்கணப்படுத்தி வைத்திருக்கின்றோம். வேலை எனும் ஆணுக்கான இந்த மூளை வடிவமைப்பே ஆண், பெண் உறவில் மிகப் பெரிய சிக்கலை உண்டு பண்ணுவதற்கான ஒரு காரணி என்று இன்றைய உளவியல் சிந்தனை சொல்கின்றது.

*பெண்ணின் மூளை வீட்டைப் பராமரிப்பதற்கும், குழந்தைகளையும் உறவுகளையும் பேணுவதற்கான வடிவமைப்பைப் பெற்றது. ஆக, பெண் தன்னை ஒரு ஆண் எப்படியெல்லாம் பராமரித்துப் போற்ற வேண்டுமென்று நினைக்கின்றாள் என்பதை ஒரு ஆணால் மிக எளிதில் புரிந்து கொள்ள முடிவதில்லை. அதனால்தான் அவளுக்குப் பிடிக்குமென்று அவளைப் பொய்யாகப் புகழ்கின்றான். ஏராளமான பரிசுகள் தருகின்றான். அவளுக்காக நேரம் செலவிடுகின்றான். ஆனாலும் அவளை நிரந்தர அன்பில் வைத்திருக்க அவனால் முடியவில்லை.*

*பெண்ணின் உள்ளம் கடலைவிட ஆழமானது, அறிந்து கொள்ள முடியாதது என்றெல்லாம் தெரிந்திருந்தாலும் அவளைத் திருப்திப்படுத்த முயன்று தோற்றுத்தான் போகின்றான். இந்தத் தோல்வியை ''ஊடல்'' என்று அக இலக்கியம் கொண்டாடும். ஊடல் என்பதை நாம் பொய்யான கோபம் என்று புரிந்து வைத்துள்ளோம். தலைவியிடம் ஏற்படும் இந்த ஊடலைத் தீர்க்கத் தலைவனிடம் போதுமான அதாவது நேரடியான மொழித்தளம் இல்லை. காரணம் அவளது ஊடல் எதற்கு என்றே! அவனால் அறிந்து கொள்ள அவளின் உள்ளம் தெரிந்து அவளைப் புரிந்து கொள்ள முயல்கின்றான். தலைவன், தலைவி ஆகியோரின் கருத்து வாயிலாகத் தோழி திகழ்கின்றாள். தோழி தவிர பாணன், விறலி போன்றோரும் வாயில்களாகச் சங்க இலக்கியத்தில் வருகின்றனர். இந்த மரபு இன்றும் தொடர்கிறது என்றுதான் சொல்ல வேண்டும் எல்லாக் காதலர்களுக்கும் தோழியும், தோழனும் (பாங்கன்) இருக்கவே செய்கின்றனர். சூழல்கள் மட்டுமே மாறியிருக்கின்றன. தினைப்புனத்திற்குப் பதில் கல்லூரி, அலுவலம், பேருந்து நிலையம், இரயில் நிலையம் என்று காதல் களம் மாறியிருக்கின்றன. ஆனால் காதல் எப்போதும் பழையதே. இப்பொழுதும் கூட ஒருவனை*

நேசித்த ஒரு பெண் இன்னொருவனை சிந்தையாலும் தொடாதவர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். தன் மனம் கவர்ந்த பெண்ணுக்காய் எதையும் செய்யத் துணியும் தலைமகன்கள் நிறையவே உண்டு. இந்தக் காதல் மரபின் வெளிப்பாடுகள் இக்கால காதல் கவிதைகளில் நிறையவே காணப்படுகின்றன. முத்தமிழ் விரும்பியின் கவிதைகளும் இதற்கு விதிவிலக்கல்ல. **இவரின் கவிதைகளில் காதல் இன்னமும் வைரத்தின் கூர்முனையாய் ஜொலிக்கவே செய்கின்றன. இந்தக் காதல் ஜோதியை இன்னமும் ஆயிரம் நிலவாய்ச் சேர்த்து ஒளிரச் செய்திருக்கிறார் முனைவர் செ. இராஜேஸ்வரி.**

**இந்த நூலில் எட்டுக்கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. எட்டும் அதனதன் தளத்தில் ஆகச் சிறந்தனவதான். நிறைய ஆங்கிலக் கவிதைகளோடு முத்தமிழ் விரும்பியின் கவிதைகள் ஒப்பீடு செய்து காட்டப்பட்டுள்ளன. அந்த வகையில் இந்நூல் உளவியல் ஆய்வைத் தாண்டி ஒப்பீட்டு ஆய்வாகவும் இயல்பாகவே அமைந்து விடுகிறது.**

**இந்த நூலின் தனித்த சிறப்பு எதுவென்று பார்த்தால் மனித மனத்தை விளக்கி, அதனைப் புரிந்து கொள்ள வைப்பதுதான்.** மனித மனம் ஆச்சரியமானது. அது எதை விரும்புகிறது எதற்கு விரும்புகிறது என்றெல்லாம் நம்மால் அறுதியிட்டுச் சொல்ல முடியாது. காதல், நட்பு எல்லாமே ஒரு விருப்பத் தேர்வுதான். ஒரு ஆண் ஒரு பெண்ணோடு வாழ விரும்புவதும்; அவள் கிடைக்காவிடில் சாகவிரும்புவதும் ஏன் என்று இன்றுவரை யாராலும் காரணம் கண்டு சொல்ல முடியவில்லை சொல்லவும் முடியாது. காதலை இப்படியானது என்று வார்த்தைகளில் எப்படிச் சொல்ல முடியும். அது உள்ளத்து உணர்வு. அதனால்தான் அதனை அகம் என்று முன்னோர் சொன்னார்கள்.

இந்த நூலின் ஆசிரியர் முனைவர் செ. இராஜேஸ்வரி மனித மனத்தையும், மனித வாழ்க்கையையும் புரிந்து

கொள்வதில் மிகுந்த நாட்டமுடையவர். இந்த நூலில் அவர் நினைத்திருந்ததையெல்லாம் சொல்லிவிட்டார் என்று என்னால் சொல்ல முடியாது. காரணம் அவரிடம் உள்ள தேடுதலும், ஆய்வு மனப்பான்மையும் பெரியது. இது ஒரு சிறந்த உளவியல் ஆய்வு நூல் ஆகும். ஆய்வு என்பதற்குத் தொடக்கம் மட்டுமே இருக்கின்றது. முடிவு என்பது இல்லை. அவர் தொடங்கியிருக்கின்றார். அவரிடமிருந்து இன்னமும் நிறைய எதிர்பார்க்கலாம். அவர் உலக இலக்கியங்களை ஆங்கிலத்தில் நிறைய வாசிப்பவர் என்ற வகையில் நான் இன்னமும் நிறைய எதிர்பார்க்கின்றேன். அறிவு சார்ந்த விசயங்களைச் செய்வதற்கு மிகுந்த ஈடுபாடும் இடைவிடாத முயற்சியும் வேண்டும். இவை இரண்டுமே கைவரப்பெற்றவர் முனைவர் செ. இராஜேஸ்வரி என்பதில் எனக்கு இருவேறு கருத்தில்லை. அவர் செய்வார் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கின்றது. காலம் இவரை ஒரு சிறப்புமிக்க இடத்தில் வைத்து அழகு பார்க்கும். இந்நூல் முத்தமிழ் விரும்பி என்ற கவிஞனை உலகக் கவிஞரோடு இணைத்துப் பார்த்துக் கொண்டாடுகிறது. இப்படியான விருப்பு வெறுப்பற்ற திறனாய்வு நூல்கள் தமிழில் தோன்றுவது அரிது. இதை நூலாசிரியர் உடைத்துச் சரி செய்திருக்கிறார். கவிஞர் முத்தமிழ் விரும்பி, முனைவர் செ. இராஜேஸ்வரி இருவருக்குமே என் அன்பான வாழ்த்துக்கள்.

வாழ்த்துகளுடன்

**(தே. ஞானசேகரன்)**

## நூலாசிரியர் பற்றி



*முனைவர் செ. இராஜேஸ்வரி மொழி பெயர்ப்பியல் துறையில் முனைவர் பட்டம் பெற்றவர்.* **புலமை, செந்தமிழ், வளர் தமிழ், ஓங்கு தமிழ் நா.வா.வின் ஆராய்ச்சி** *போன்ற ஆய்விதழ்களில் ஆய்வுக் கட்டுரைகள் வெளியிட்டார்.* **மொழி பெயர்ப்பியல் ஆய்வு** *என்ற ஆய்வுக் கட்டுரைகள் அடங்கிய நூல் ஒன்றை 1992இல் வெளியிட்டார். இந்நூல் இணையத் தமிழ் பல்கலைகழகத்தின் மின் நூல் தொகுப்பில் இடம்பெற்றுள்ளது.*

*1988 முதல் தமிழ் ஆங்கில மொழி பெயர்ப்புப் பணிகளில் ஈடுபட்டுள்ளார். Indian Women–Changes and Challenges, Urban Theology, Vaigai Paripatal, Assisted reproductive technologies and its Impact on Women, Eco Vision and Mission, Bachelor's Study Materials for Social Science [IGNOU], Neuro Ophthalmology Articles போன்ற பல துறை சார்ந்த பனுவல்களைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். 1993இல் ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் இணைப் பதிப்பாசிரியராகப் [Associate editor] பணியாற்றினார். அப்போது ஜப்பானிய மொழியைத் தமிழில் கற்பது எளிது என்பதை அறிந்து அதற்கான நூல் உருவாக்கும் பணியில் ஜப்பானியப் பெண் யூகோ ஃபுகுரோயியுடன் இணைந்து செயல்பட்டார். அந்த நூல் மூன்று பாகங்களாக வெளி வந்துள்ளது. ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் வெளிநாட்டு மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். தமிழ் மாணவர்களுக்கு ஜப்பானிய மொழி இலக்கணம் கற்பித்தார். யுக்கோ சான் அம்மாணவர்களுக்கு ஒலிப்பயிற்சி அளித்தார்.*

*1986 முதல் சமயச் சொல் அகராதி, எபிரேயம் - தமிழ் அகராதி; கிரேக்கம் - தமிழ் அகராதி உருவாக்கத்திற்காக மக்கள் கல்வி அறக்கட்டளையின் இயக்குனர் மறை திரு.இராபின்சன் லேவி ஐயா அவர்களுடன் இணைந்து இருபது ஆண்டுகள் தீவிரமாகப் பணியாற்றினார். ஈரோடு மகளிர் கலை, அறிவியல் கல்லூரி, திருச்சி ஸ்ரீமத் ஆண்டவன் கலை, அறிவியல் கல்லூரி, மதுரை அமெரிக்கன் கல்லூரி போன்றவற்றில் சில ஆண்டுகள் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றினார்.*

*2000இல் மதுரையில் அமெரிக்காவின் விஸ்கான்சின் பல்கலைக்கழக மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். அப்போது வெளி நாட்டவருக்கு தமிழ் கற்பிக்கப் பாட நூல் ஒன்றை உருவாக்கினார். அரவிந்த் கண் மருத்துவமனையில் மொழி பெயர்ப்பாளராகவும் வேற்று மாநிலம் மற்றும் வெளிநாட்டு மருத்துவர்களுக்கு, தமிழ் ஆசிரியராகவும் பணியாற்றினார். அப்போது தமிழ் தெரியாத கண் மருத்துவர்களுக்குத் தமிழ் கற்பிக்க Tamil for Non-Tamils என்ற பாட நூலை உருவாக்கினார். இன்றும் அந்தப் பாட நூல் அங்குப் பயன்பாட்டில் உள்ளது. அது போல அங்குச் செவிலியர் பயிற்சி பெறும் இளம் பெண்களுக்கு ஆங்கிலம் கற்பிக்க Easy English என்ற ஆங்கிலப் பாட நூலை உருவாக்கினார். மக்கள் கண்காணிப்பகத்தில் வெளி மாநிலத்தவருக்கு ஆங்கிலமும் வெளி நாட்டவருக்குத் தமிழும் கற்பித்தார்.*

*தமிழ் கற்கும் வெளிநாட்டு மாணவர்களுக்காக சென்ட்டர் ஃபார் லேங்குவேஜ் ஸ்டடீஸ் [Centre for Language Studies] என்ற பெயரில் தனி மையம் ஒன்றை அமைத்து அவர்களுக்குத் தமிழ் கற்பித்தார்.*

*எம்.ஜி.ஆர். பற்றி **“ஒப்பனையும் ஒரிஜினலும் எம்.ஜி.ஆர். 100”** என்ற தலைப்பில் விகடன்.காமில் (காம் இணைய தளத்தில்) முப்பது கட்டுரைகள் வெளியிட்டார்.*

*அதன் தொடர்ச்சியாக கனடாவில் இருந்து வரும் www.tamilauthors.com என்ற இணைய இதழில் தொடர்ந்து கட்டுரைகள் எழுதினார். எம்.ஜி.ஆரின் ரசிகர் மன்றங்களின் தனித்தன்மை குறித்து ஆங்கிலத்தில் ஒரு நூல் எழுதிவருகிறார். எம்.ஜி.ஆர். பற்றி நூறு நூல்கள் எழுத வேண்டும் என்பது இவர் இலட்சியம். அதில் தற்போது* ***வெற்றித் திருமகன்*** *என்ற பெயரில் தொடங்கும் வரிசையில் 18 நூல்கள் வெளிவந்துள்ளன.*

*தஞ்சையைச் சேர்ந்த தமிழ் இலக்கியச் செம்மல் கவிஞர் முத்தமிழ் விரும்பி அவர்களின் பூ மர நிழல், வறட்சியின் பாடல்கள், உன்னொடு உரையாடுதல் காதலின் மொழி, திட்டிவாசல் பெண்ணொருத்தி, மற்றும் தேனடையும் வரலாறு என்ற கவிதை நூல்களை இவர் முறையே* **"Shade of the Flowering Tree, Songs of Dryness, Speaking with You, Language of Love, The Flower Moon (A Lady at the little gate) and Honey Hive, Ambrosial Kiss (Editor)",** *என்று ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். இந் நூல்களைச் சென்னை எமரால்டு பதிப்பகம் வெளியிட்டுள்ளது.*

*தமிழிலக்கியச் செம்மல் கவிஞர் பொறிஞர் முத்தமிழ் விரும்பி அவர்களின் பூ மர நிழல் மற்றும் திட்டி வாசல் பெண்ணொருத்தியின் தொகுப்புகளில் உள்ளடக்கப் பகுப்பாய்வு மேற்கொண்டு அவற்றைப்* ***பூ மர நிழலில் களமும் காலமும் மற்றும் கவிஞர் பொறிஞர் முத்தமிழ் விரும்பியின் பாடுபொருளும் பாசப்பொருளும் [திட்டிவாசல் பெண்ணொருத்தி மட்டும்], என்ற நூல்களையும் '2020 தை மாதத்தில் இன்று' கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு, முத்தமிழ் விரும்பியின் கவிதையில் காதல், முத்தமிழ் விரும்பியின் கவித்திறம்*** *என்ற நூலையும் வெளியிட்டார்.*

*பண்பாட்டு ஆய்வு நூல் வரிசை என்ற தலைப்பில்* ***பண்பாட்டு நகர்வுகள் [தமிழ் நாட்டில் இருந்து***

***ஜப்பானுக்கு], தேவேந்திரன், பெண் தெய்வ வழிபாடு, மருத நிலப் பெண் தெய்வங்கள்*** *ஆகிய நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார்.*

***சென்னைப் பெருநகராட்சியின் முன்னாள் மேயர் மனித நேயச் செம்மல் சைதை சா. துரைசாமி அவர்களின் சிறப்புத் திட்டங்களும் செயல்பாடுகளும்*** *என்ற பெயரில் ஒரு நூல் எழுதி வெளியிட்டார். இவர் சத்தியபிரபா என்ற புனைப்பெயரில் எழுதிய சிறுகதைகள்* ***'அமராவதியின் காதல்'*** *என்ற பெயரில் தொகுக்கப்பட்டு அமேசானிலும், அச்சிலும் வெளிவந்தது. நெருஞ்சி இலக்கிய இதழில் இவரது கட்டுரைகள் வருகின்றன. தினகரன் ஜோதிட மலரில் இவர் எழுதிய* ***"என்னோட ராசி நல்ல ராசி"*** *என்ற தொடர் வந்து கொண்டிருக்கின்றது. மாதமிரு முறை வரும் ஆன்மீகம் இதழில் இவரது கட்டுரைகள் தொடர்ந்து வெளிவருகின்றன.*

*தஞ்சையில் உள்ள நெருஞ்சி இலக்கிய இயக்கம் இவருக்கு 'சிறந்த மொழி பெயர்ப்பாளர் விருதை வழங்கியது. மதுரை லேடி டோக் கல்லூரி இவருக்கு மொழிபெயர்ப்பு மற்றும் ஆராய்ச்சிக்கான 'பெண் சாதனையாளர்' விருதை வழங்கியது.*



## உள்ளடக்கம்





# காதலின் சிறப்பு

*காதல் என்பது ஆண் பெண் இருவருக்கு இடையே ஏற்படும் ஈர்ப்பு ஆகும். இதற்கு தொல்காப்பியர் இலக்கணம் கூறும்போது ஒன்றிணைக்கும் விதியின் ஆணையால் ஒத்த கிழவனும் கிழத்தியும் ஒருவரை ஒருவர் கண்டு உள்ளத்தால் கவரப்படுவதை காதல் அல்லது களவு என்கிறார். இன்னொரு நூற்பாவில் காமத்திணை (தொல்.1054) என்றும் குறிப்பிடுவார். இவ்விருவரில் ஆண் தகுதியால் உயர்ந்தவனாக இருந்தால் குற்றம் இல்லை என்றும் கருதுகிறார். அடுத்து*

*இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு*
*அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்*
*காமக் கூட்டம் காணும் காலை (1038)*

*என்ற நூற்பாவில் இருவரும் ஒருவர்பால் ஒருவர் கொள்ளும் அன்பினால் இல்லற வாழ்வில் இணைவதை காதல் என்கிறார்.*

*காதல் கொள்ளும் ஆண் குலப் பெருமையும் உடல் உரமும் பெற்றவனாக விளங்க வேண்டும். (1044) பெண் அச்சம் நாணம் மடம் ஆகிய உயரிய பண்புகளைப் (1045) பெற்றிருக்க வேண்டும், என்பதும் தொல்காப்பியத் தமிழ் இலக்கண மரபு ஆகும்.*

## தொல்காப்பியக் காதல்

*தொல்காப்பியத்தில் திருமணத்திற்கு முந்தைய காதல் களவியல் என்ற அதிகாரத்தில் விளக்கப்பட்டுள்ளது. திருமணத்துக்குப் பிந்தைய கணவன்-மனைவி உறவின் இலக்கணம் கற்பியல் என்ற அதிகாரத்தில் உள்ளது. பொதுவாகக் கணவனும் மனைவியும் இணைந்து வாழும் குடும்ப வாழ்க்கை காதல் வாழ்க்கையாக விளங்கும் என்று கொள்ள இயலாது. காதல் இல்லாமலும் குடும்பம் சிறப்பாக நடப்பதுண்டு. அவரவர் கடமையை சிறப்பாகச் செய்யும்போது குடும்ப வாழ்க்கை சீராக அமையும். ஆனால் காதல் என்பது கடமைகளைச் செய்வதற்காக ஏற்பட்ட உள்ளப் பிணைப்பு அன்று. காதல் ஒருவர்பால் ஒருவர் கொள்ளும் இனம்புரியாத ஈர்ப்பு ஆகும். எல்லோருக்கும் குடும்பம் அமையும் .ஆனால் எல்லோருக்கும் காதல் அமைவதில்லை.*

## காதல் - அறிவியல் விளக்கம்

*இலக்கிய இலக்கணங்கள் காதல் என்பதற்கு வெவ்வேறு வரையறைகளை எடுத்துரைப்பது போல அறிவியலும் காதல் என்ற உணர்வு எப்படி தோன்றுகிறது என தன் துறை சார்ந்த விளக்கத்தைத் தருகின்றது.*

*அறிவியலாளர் காதலை மூன்று படிநிலைகளாக ஆராய்கின்றனர்.*

### *1. வேட்கை (lust)*

*ஆணுக்கு டெஸ்ட்டோஸ்டெரோன் என்ற சுரப்பும் பெண்ணுக்கு ஈஸ்ட்ரோஜென் என்ற சுரப்பும் அவர்களுக்குள் வேட்கையை உருவாக்குகிறது. இதனால் ஒருவர்பால் ஒருவர் ஈடுபாடு கொள்கின்றனர். சங்க இலக்கியத்தில் தலைவனைக் காண வேண்டும் என்ற வேட்கை கொண்ட காதலியின் நிலை மரத்தின்*

*சிறு காம்பில் தொற்றிக் கொண்டிருக்கும் கனிந்த பழத்துக்கு ஒப்பிடப்படுகிறது.*

*சிறு கோட்டுப் பெரும் பழம்*
*தூங்கி யாங்கு இவள்*
*உயிர் தவச் சிறிது, காமமோ பெரிதே.*

*என்ற வரிகளில் வரும் காமம் உடற்கவர்ச்சி அன்று. இங்கு காமம் என்ற சொல் கனிந்த காதலைக் குறிக்கின்றது.*

*காமம் நிறைந்து இயலும் (838)*

*என்று செய்யுளியலில் தொல்காப்பியர் இச் சொல்லுக்குரிய பொருளை வரையறுக்கிறார். முத்தமிழ் விரும்பி தன் கவிதைகளில் அவன் அவளிடம் கொண்ட வேட்கையை அவள் உணராமல் இருப்பதை எண்ணிக் கலங்கி*

*தன்னை வதைத்தல்*
*தகாதடி பெண்ணே (காவியமொன்று உன் பெயரில்,*
**தேனடையும் வரலாறு***)*

*என்றும்*

*நீ ஏன்*
*வதை முகாம் நடத்துகிறாய் (மனசறியும் வித்தை,*
*உன்னோடு உரையாடுதல்)*

*என்று வேட்கையைக் கவித்துவமாக உணர்த்துகிறார்.*

### *2. ஈர்ப்பு (attraction)*

*ஆணும் பெண்ணும் ஒருவர் பால் ஒருவருக்கு அவர்தம் உடலில் தோன்றும் மூன்று சுரப்புகளின் காரணமாக ஈர்க்கப்படுகின்றனர். அவை கிளர்ச்சியூட்டும் டோபோமின், அட்ரீனலின் மற்றும் நொரிப்பினேபிரின் ஆகியன. இச் சுரப்புகளால் அவனும்*

அவளும் ஒருவரை விட்டு ஒருவர் கண நேரமும் பிரியாமல் இருக்க வேண்டும் என்ற முடிவிற்கு வருகின்றனர். இருவரின் உள்ளங்களும் இரண்டறக் கலந்துவிட்ட இவ்வியல்பை

*செம்புலப் பெயல் நீர் போல*
*அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே*
*(குறுந்தொகை 40)*

என்கிறது சங்கப் பாடல்.

இம்மூன்று சுரப்பிகளில் அட்ரீனலின் சுரக்கும்போது பெண்ணின் கன்னம் சிவக்கிறது. இதனை நாம் நாணம் என்கிறோம். அவளது உள்ளங்கை வியர்க்கிறது. இதயத்துடிப்பு அதிகமாகின்றது. படபடப்புடன் காணப்படுகிறாள். காதலினால் உடலில் ஏற்படும் மாற்றங்கள் அவள் ஒருவனைக் காதலிக்க ஆரம்பித்து விட்டாள் என்ற எண்ணத்தை உறுதி செய்கின்றது.

தொல்காப்பியர் உவகைக்குரிய மெய்ப்பாட்டுக் களங்களைக் குறிப்பிடும் போது செல்வம் புலனே புணர்வு விளையாட்டு என்று அல்லல் நீத்த உவகை நான்கே (தொல்.1205) என்கிறார். இவற்றில் புணர்வு என்பது உள்ளங்களின் இணைப்பைக் குறிக்கின்றது. காதலின் காரணமாக தோன்றும் மெய்ப்பாடுகளை இருபத்து நான்காக தொல்காப்பியர் வரிசையிடுகிறார்.

சில காதலருக்குத் தம்முள் ஒருவருடைய படத்தைப் பார்த்ததும் அல்லது பயன்படுத்தும் ஏதேனும் ஒரு பொருளைப் பார்த்ததும் மூளையில் டோபோமைன் சுரக்க ஆரம்பிக்கும். இதனால் அவர்களுக்குள் அதீத உள்ளக் கிளர்ச்சி ஏற்படும். பேருவகை தோன்றும். அளவிலா மகிழ்ச்சி ஏற்படும். இத்தகு செயல்பாடுகளை கவிஞர்கள் தங்களுடைய பாடுபொருளாக்கி கவிதை

வரைந்துள்ளனர். முத்தமிழ் விரும்பி தன் கவிதையில் காதலியின் கடிதத்தைப் பார்த்த காதலன் அடையும் மகிழ்ச்சி,

*தபால்காரன்*
*கையில் தரும்போதே*
*நேரில்*
*நீ வந்ததாய்*
*நினைக்கத் தோன்றும்*

*நிகழ்வின் புழுக்கம்*
*நெருக்கும் போது*
*தென்றலாய் வந்து*
*வீசும்*
*பேசும்*

*உன் முகவரி சொல்லும்*
*கையெழுத்து*
*முகம் மலர்த்தி*
*செலவான காலத்தின்*
*நினைவுகளுக்கு*
*எண்ணெயூற்றும் (பூ மர நிழல்)*

என்று விவரிக்கிறார்.

### 3. பிணைப்பு (attachment)

ஆண் பெண் இருவரும் காதலிக்க ஆரம்பித்ததும் ஆக்சிடோஸின் சுரக்க தொடங்கும். அப்போது பிணைப்பு உண்டாகும். அப்போது இருவருக்கும் எப்போதும் உள்ளத்தாலும் உடலாலும் இணைந்திருக்க வேண்டும் என்ற எண்ணம் வரும். ஈருடல் ஒரு உயிராக வாழும் முடிவுக்கு இருவரும் வருவர். தங்களுக்குள் ஏற்படும் இப்பிணைப்பு வாழ்நாள் முழுக்கத் தொடரும் வகையில் நீண்டகாலத் திட்டங்களை உருவாக்குவர்.

*ஆக்ஸிடோசின் சுரப்பு காரணமாக தழுவுதல், முத்தமிடுதல் போன்ற எண்ணங்களும் உருவாகும். உலகெங்கும் கவிஞர்கள் முத்தம் என்பதைத் தமது காதல் கவிதைகளின் முக்கியப் பாடுபொருளாய்க் கொண்டனர்.*

*பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி*
*வாலெயிறு ஊறிய நீர் (காதற்சிறப்பு உரைத்தல்,*
*குறள் எண்:1121)*

*என்றார் வள்ளுவர்.*

*மூத்தவர் சம்மதியில் - வதுவை*
*முறைகள் பின்பு செய்வோம்*
*காத்திருப் பேனோடீ - இதுபார்*
*கன்னத்து முத்தமொன்று (கண்ணம்மா – என் காதலி*
*கண்ணன் பாட்டு)*

*என்றார் பாரதியார்.*

*காதோரம் சூடேற*
*கட்டி*
*முத்தங்கள் பிழிவேன் (தேனடையும் வரலாறு)*

*என்கிறான் முத்தமிழ் விரும்பியின் கவிதை நாயகன்.*

*மேற்குறிப்பிட்ட சுரப்பிகள் இசை, நடனம், விளையாட்டு போன்ற நிலையிலும் சுரந்து மன மகிழ்ச்சியை உருவாக்கும்.*

## காதலுக்கான காரணிகள்

*ஒருவர் பால் மற்றொருவருக்கு ஈர்ப்பு உண்டாவதற்கான காரணிகளை அறிவியலார் ஆராய்ந்து தெரிவித்துள்ளனர்.*

### *1. உடம்பின் வாசனை*

*சில பெண்களுக்கு ஆணின் உடம்பு வாசனை பிடிக்கும். இதற்கு அந்த ஆணின் உடம்பில் சுரக்கும்*

வியர்வை முதலான சுரப்பிகளின் மணம் காரணமாக அமையும். இந்த வாசனையால் கவரப்பட்டு அவனுடன் இருக்க அவள் விரும்புகின்றாள். விலங்குகளின் இணை விழைச்சுக் காலத்தில் ஆண் விலங்கின் உடம்பில் தனித்த ஒரு வாசனை தோன்றும். அந்த வாசனையால் பெண் விலங்குகள் கவரப்படும். யானைக்குக் கவுள் பகுதியில் இருந்து மத நீர் ஒழுகும். மத நீர் மணத்தை கவுள்ச்சி என்பர். இதைக் கவுச்சி என்று பேச்சு வழக்கில் சொல்வதுண்டு. ஆனால் மத நீர் வாசனை வண்டினங்களையும் தன் பால் ஈர்க்கும். பிடி எனப்படும் பெண் யானைகளைக் கவரும். தன்னை நாடி வரும் பெண் யானையை களிறு விரும்பும். எனவே,

*களிறுக்குப் பிடிக்கும்*
*இளமை ததும்பும் பிடி* (பிடி - தேனடையும் வரலாறு)

என்பார் முத்தமிழ் விரும்பி.

## 2. கருத்து ஒற்றுமை

காதல் தோன்றுவதற்கான இன்னொரு முக்கிய காரணி கருத்து ஒற்றுமை ஆகும். இருவருக்கும் இடையே கருத்து உடன்பாடு இருந்தால் அவர்கள் வாழ்வில் ஒன்று சேர்வதற்குக் காரணமான காதல் உருவாகும்.

*காதல் இருவர் கருத்து ஒருமித்து*
*ஆதரவு பட்டதே இன்பம்*

என்பது ஔவையார் வாக்கு. காதலில் வெற்றி பெற்றவர்களில் 80% பேர் இந்த அடிப்படையில் இணைந்தவர்கள் ஆவர் என்று புள்ளிவிவரங்கள் தெரிவிக்கின்றன.

## 3. வடிவழகு

மூன்றாவதாக ஒருவரின் தோற்றத்தால் கவரப்பட்டு காதலிக்கலாம். இக்கருத்தின் படி பெண்ணின் உடல்

*வனப்பு ஆணுக்குள் ஏற்படுத்தும் சிலிர்ப்பைப் போல ஆணின் உடல் அமைப்பு பெண்ணுக்கு அவன் மீது ஈர்ப்பை ஏற்படுத்துவது கிடையாது. இது மனித சமுதாயத்தின் இயற்கை. ஒரு பெண் ஆணின் செயல்திறன், பேச்சுத்திறன், அவனோடு இருப்பதால் கிடைக்கும் பாதுகாப்புணர்வு போன்றவற்றால் கவரப்படுகிறாள். வடிவத்தால் அல்ல, வண்ணத்தாலும் அல்ல. இதுவே உலக இயற்கை. இதன் காரணமாகவே உலகெங்கும் கவிஞர்கள் பெண்ணின் உடல் அழகைப் பாடுபொருளாக்கிக் கவிதை புனைந்துள்ளனர். சங்க காலத்தில் எழுதப்பட்ட ஆற்றுப்படையில் விறலியை அங்கம் அங்கமாக வருணித்த புலவர் அவளது உள்ளங்காலின் சிவப்பை ஓடிக் களைத்த நாயின் நாவுக்கு உவமையாக்கினார். பாரதியார்*

*சுட்டும் விழிச் சுடர் தான் கண்ணம்மா*
*சூரிய சந்திரரோ*
*வட்ட கரிய விழி கண்ணம்மா*
*வானக்கருமை கொலோ (கண்ணம்மா என் காதலி,*
*கண்ணன் பாட்டு)*

*என்று நலம் பாராட்டினார். இதனை பழந்தமிழிலக்கியத்தில் நலம் புனைந்துரைத்தல் என்றனர்.*

*வெண் தோள் தொட்டு விளையாடும்*
*நெளி பனைக்கூந்தல்*
*மலர் மணம்*
*நாகப் படமெடுத்தாட*
*மகுடியான*
*எனதிரு கண்கள்*

*நீயும் நோக்க*
*யாழ் வண்டுகள்*
*விழும் பாதவிரல் தொட்டு (முட்டித் தழுவும்*
*இளவேனில்,* **உன்னோடு உரையாடுதல்**)

என்று நலம் புனைந்துரைக்கிறார் முத்தமிழ் விரும்பி. பெண்ணின் அழகைப் புனைந்துரைப்பது அனைத்துலக ஆண்களிடமும் அனைத்துக் காலத்திலும் காணப்படும் இயல்பாகும். ஆனால் பெண்கள் ஆண்களின் உடலை வர்ணிப்பது கிடையாது. பெண்கள் ஆணின் உடலைக் கண்டு மோகம் கொள்வதில்லை. அவனது விரிந்த தோளும் பரந்த மார்பும் அவன் வீரத்தின் அடையாளமாகவே காட்டப்படுகிறது. பெண்பாற் புலவர்களும் பெண்களின் காதல் உணர்வுகளை மட்டுமே பாடினர். காதலைப்பற்றி சாஃபோ என்ற கிரேக்க பெண் கவிஞரின் கிரேக்கப்பாடலின் ஆங்கில வடிவம் வருமாறு

*Peer of the Gods is that man, who*
*Face to face, sits listening*
*To your sweet speech and*
*Lovely laughter.*

*It is this that rouses a tumult*
*In my breath,*
*At the mere sight of you*
*My voice falters,*
*My tongue is broken*

*Straight away, a delicate fire*
*Find in my limbs*
*My eyes blinded*
*And my ears thundered*

*Sweat pours out,*
*A trembling hunts me down*
*I grow pale than dry grass*
*And lack little of dying*

*(ஆங்கிலத்தில் William Carlos William)*

சாஃபோவின் இக்கவிதையில் அவனைக் கண்டதும் அவளுக்குள் ஏற்படும் மாற்றங்கள் உடலியல் மற்றும் உளவியல் மாற்றங்கள் உணர்த்தப்பட்டுள்ளன. பெண்கள் தமது கலைப்படைப்புகளில் விரும்புவதும் விளக்குவதும் இதைத் தான். பாரதியாரும் கண்ணன் என் காதலன் கவிதையில் பெண்ணின் உள்ளக் கிடக்கையை அவள் வாயிலாக விளக்கும்போது பெண்ணின் உளவியல் தெற்றென விளங்குகிறது.

வடிவமைப்பு என்று விளக்கும்போது பெண்ணின் இடுப்புக்கும் தோளுக்கும் இருக்கும் அளவு 7:10 என்றும் ஆணுக்கு இதே அளவு 9:10 என்றும் மேலைநாட்டில் வரையறுத்துள்ளனர். இத்தகைய வடிவமைப்பு ஒருவர் பால் மற்றவருக்கு ஈர்ப்பு ஏற்படுத்துகிறது என்பது பொதுவான கணிப்பு ஆகும். மேலும் ஒரு ஆணுக்கு டெஸ்டோஸ்டிரோன் அதிகமாக சுரந்தால், விந்து எண்ணிக்கை கூடுதலாக இருக்கும், அவரது மரபுக் கூறுகள் ஆரோக்கியமாக விளங்கும்.

## காதலின் வகைகள்

மேலைநாட்டில் காதலை ஏழு வகையாகப் பிரிக்கின்றனர். அவற்றை கிரேக்கச் சொற்களால் விளக்குகின்றனர்.

1. ஈராஸ் (eros) - பாலுறவு சார்ந்த ஈர்ப்பு
2. ஃபிலியா (philiea) - மனம் சார்ந்த ஈர்ப்பு
3. லூடுஸ் (ludus) - விளையாட்டுக் காதல்
4. ப்ராக்மா (pragma) - நீண்ட காலம் நிலைத்திருக்கும் உறவு
5. அகபே (agape]- ஆத்மாக்களின் இணைப்பு
6. ஃபிலவ்டியா (philautia) - தன்னைத்தானே காதலிக்கும் நிலை.
7. ஸ்டோர்கே (storge) - குழந்தைக் காதல்

இந்த ஏழு வகை காதலில் மூன்றை மட்டும் மிகச் சிறப்பானதாகக் கருதுகின்றனர். அவை *eros, phileo, agape* என்ற மூன்றும் ஆகும். இம்மூன்றனுள் அகபே எனப்படும் வகை, தமிழ்க் காதலோடு ஒப்பு நோக்கத்தக்கது. காதலர்கள் ஒருவருக்கொருவர் உதவுவதில் அளவுகடந்த ஆசை கொண்டிருப்பதைக் குறிக்கிறது. இவர்களுக்கு இடையிலான காதல் எவ்வித இடையூறு ஏற்பட்டாலும் மாறாதது. ஒருவர் பால் ஒருவர் கொண்டுள்ள ஈர்ப்பு உறுதியானதாகவும் ஆழமானதாகவும் இருக்கும்.

*நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று*
*நீரினும் ஆரள வின்றே சாரல்*
*கருங்கோற் குறிஞ்சிப் பூக் கொண்டு*
*பெருந்தேன் இழைக்கும் நாட னோடு நட்பே*

என்ற குறுந்தொகை (3) காட்டும் காதலை ஒத்தது.

மேலும் ‘அகபே’ என்ற காதல் வகை ஒருவருக்கொருவர் மகிழ்ச்சியை ஊட்டிக்கொண்டே இருக்கும். திருமறையிலும் அகபே விருந்து பற்றிய குறிப்பு காணப்படுகிறது. அகபே வகைக் காதலை மேலைநாட்டார் சிறப்பான காதலாகக் கொண்டாடுகின்றனர்.

## முத்தமிழ் விரும்பியின் ‘அகபே’ காதல் கவிதைகள்

அகபே எனப்படும் சிறப்பான காதல் வகையைச் சேர்ந்தவை முத்தமிழ் விரும்பியின் காதல் கவிதைகள் ஆகும். இவரது கவிதைகளில் கோபம், வெறுப்பு, பகைமை, துரோகம் போன்ற எதிர்மறை உணர்வு பிரதிலிப்புகளைக் காண இயலாது. காதலின் உன்னதம் எடுத்துரைக்கப்படும் கவிதைகளையே காணலாம்.

*தேனான பெண்ணவள்*
*தெவிட்டாத சொல்லவள்*
*காய்ச்சல் தரும் கதிரின் ஒளி*

*மாலை காலத்தில் வரும்*
*சிறு மழையில்*
*மேனி முழுவதும்*
*பரவிச் சிலிர்க்கும்*
*மெல்லிய ஈரம்*

*அவளது குறும்புச் சொல் (தேனான பெண்,*
***உன்னோடு உரையாடுதல்)***

*என்பன போன்ற கவிதைகள் ஏராளம். காதலுக்கு வரைவிலக்கணம் தரும் மற்றொரு கவிதை,*

*உன்னில் / என்னில் விதைத்தால்*
*என்னில் / உன்னில் விளையும்*
*பூ ( பூ மர நிழல்])*

*என்ற இக்கவிதை மனதுக்குள் காதலை விளைத்தால் மகிழ்ச்சி என்ற பூ பூக்கும் என்கிறது.*

## *அன்பின் ஐந்திணை*

*சங்க இலக்கியத்தில் காணும் அகப்பாடல்களில் அன்பின் ஐந்திணை என்று குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் பாலைத் திணைகள் பிரிக்கப்பட்டு முதல் உரி, கரு என்று பாடுபொருள்களும் வகைப்படுத்தப்பட்டன. ஒவ்வொரு நிலப் பின்புலத்துக்கும் சிறப்பான உரிப்பொருள் (பாடுபொருள்) தெரிவு செய்யப்பட்டது. எல்லா நிலத்திலும் எல்லா உரிப் பொருளும் காணப்படும் என்றாலும் புலவர்கள் பாடும்போது அந்நிலத்தின் பின்புலத்தையும் உரிப்பொருளுடன் இணைத்துக் காட்டுவதால் அதற்கேற்ப உரிப்பொருள் வரையறுக்கப்பட்டது. திருமணம் முடிந்து தேனிலவு செல்பவர்கள் ஊட்டி, கொடைக்கானல், சிம்லா, காஷ்மீர், என்று மலைப்பகுதியைத் தேடிச் செல்கின்றனர். மலையும் மலை சார்ந்த இடமும் காதலுறவுக்கு ஏற்றது. குறிஞ்சித் திணையின் உரிப்பொருள் கூடலும் கூடல்*

*நிமித்தமும் ஆகும். ஆக 2000 ஆண்டுகளுக்கு முந்தைய சங்க இலக்கியத்தின் உரிப்பொருள் தெரிவு இன்றைக்கும் பொருந்தி அமைவதைக் காணலாம். காதல் தோன்றும் இடமாக குறிஞ்சித்திணை காட்டப்படுகிறது.*

## தொழிற் புரட்சியும் புனைவிலக்கியமும்

*ஐரோப்பாவில் தொழிற்புரட்சி ஆரம்பிக்கப்பட்ட காலத்தில் காதலை மிகைப்படுத்தி பாடுகின்ற கவிதைகள் அதிகமாகத் தோன்றின. கீட்ஸ், ஷெல்லி போன்ற கவிஞர்கள் காதலைப் பற்றி அழியாக் கவிதைகளை இயற்றினர். ரொமாண்ட்டிசிஸம் என்ற அமைப்பு தோன்றியது. ரொமான்ஸ் என்றால் பெரும் கூட்டத்தைப் பார்த்து 'ஒ மக்களே' [Ro mans] என்று அழைப்பதாகப் பொருள்படும். ஆக 'ரொமாண்ட்டிக்' என்ற சொல் மக்களுக்கான என்ற பொருளில் பயன்பட்டது.அதற்கும் ரோம் நாட்டுக்கும் மக்களுக்கும் யாதொரு தொடர்பும் கிடையாது. மக்களுக்கான புனைந்துரை படைப்புகள் என்றே கொள்ளவேண்டும். ஆனால் அதன்பேரில் பெரும்பாலும் காதல் கவிதைகளே இயற்றப்பட்டதனால் அச்சொல் காதல் உணர்ச்சியைக் குறிப்பதாக பொருள் பெறலாயிற்று.*

## காதலின் வகைகள்

*காதல், இலட்சியக் காதல், ஆன்மீகக் காதல், புலன் உணர்ச்சிக் காதல் என்று மூவகைப்பட்டது, எனப்பார் முனைவர் ஜான் சாமுவேல்.. பெரும்பாலும் புனைவு இலக்கியக் காலத்துக் கவிஞர்கள் ஆங்கிலத்தில் இலட்சியக் காதல் [ideal love]பற்றி பல கவிதைகளை எழுதினர். அக்காலகட்டத்தில் உலகெங்கும் பல மொழிகளிலும் வந்த திரைப்படங்களும் நாடகங்களும் இலட்சியக் காதலைத் தமது கருப்பொருளாகக் கொண்டிருந்தன. கிப்ரான், ரூமி போன்ற சூஃபி (sufi)*

*கவிஞர்கள் ஆன்மீகக் காதல் [mystic love] பாடல்களைப் பாடினர். இவற்றையும் பலர் இலட்சியக் காதலோடு இணைத்து நோக்கினர். புலன் நுகர்ச்சி காதல் [Sensual love] சற்று மதிப்பு குறைந்ததாகக் கருதப்பட்டாலும் அதே காலக்கட்டத்தில் இக்காதல் பாடல்களுக்கும் வரவேற்பு இருந்ததாக அறிகிறோம்.*

### ***ஆத்தும நேசர் (soul mates)***

*ஆத்தும நேசர் என்பது கிறிஸ்தவர்களின் மொழி வழக்கில் காணப்பட்டாலும் அது தெய்வீகக் காதலை மட்டும் குறிப்பதன்று. காணவோ பேசவோ பழகவோ வாய்ப்பில்லாத நிலையிலும் ஒருவரை ஒருவர் காதலிப்பதே ஆத்தும நேசம் எனப்படுகிறது. இவர்கள் தமக்குள் டெலிபதி காரணமாக எதிர்வினை ஆற்றுவதாகவும் நம்பப்படுகிறது. உடல் கவர்ச்சி இல்லாதக் காதல், ஆத்தும நேசம் எனப்படும். இக் காதலர்களை ஆங்கிலத்தில் soul mates என்பர்.*

*தெய்வீகக் காதல் என்பது ஆண்டாள், ராதை, மீரா போன்றோர் கண்ணனுடன் கொள்ளும் காதலைப் போன்றது. மதுரைப் பகுதியில் பெண்களைப் பாண்டி சாமி பிடிப்பதும், அவர்கள் பாண்டிசாமியோடு கற்பனையில் வாழ்வதும் இவ் வகையைச் சேர்ந்ததாகும். ஆண்டவரைத் தமது மணவாளனாகக் கருதுவதை கிறிஸ்துவத்திலும் காண்கிறோம். கிறிஸ்துவத் திருமறையின் உன்னதப் பாடலில் இக்காதலை வெளிப்படுத்தும் பாடல்களும் உள்ளன. இவற்றில் காதலர் ஒருவர் மீது மற்றவர் கொண்டுள்ள பிரமிப்பும் அன்பும் மிக உயர்ந்ததாகும். சான்றாக, உன்னதப் பாட்டில் 'உன் நேசர் மற்றவரை விடச் சிறப்பானவரா?' எனக் கேட்ட போது அவள்*

*என் நேசர் சிவப்பானவர்,*
*அவரது தலை சுத்தமான தங்கத்தைப் போலிருக்கும்,*

*அவரது கன்னங்கள் மணம் மிகுந்த வாசனை பூக்கள் நிறைந்த தோட்டம் போலிருக்கும்*

என்று புகழ்ந்துகொண்டே போகிறாள். நேசரும் தன் பிரியத்துக்குரிய பெண்ணை பின்வருமாறு வருணிக்கிறார்,

*என் அன்பே என் மணமகளே*
*உன் அன்பு மிக அழகானது*
*உன் அன்பு திராட்சை ரசத்தை விட சிறந்தது,*
*என் அன்பே நீ எருசலேமை போன்று*
*இனிமையானவள்*

இவ்வருணனைகளுக்கு இறையியல் நோக்கில் விளக்கம் அளிக்கப்படுகிறது. இஸ்லாத்திலும் இறைவனை நேசிக்கும் மங்கையர் வாழ்க்கை பற்றி இஸ்லாமிய எழுத்தாளர் அர்ஷியாவின் நூல்களில் வாசிக்கிறோம். பெரிய திருமடல், சிறிய திருமடல் ஆகியன திருமங்கை ஆழ்வார் தம்மைப் பெண்ணாகப் பாவித்துப் பெருமாளை நேசித்த பாங்கை எடுத்தியம்புகிறது.

## இலட்சியக் காதல் (Ideal love)

இலட்சியக் காதல் என்பது கண்டவுடன் காதல், காதலன் தீயவன் என்று அறிந்த பின்பும் அவனை மணந்துகொண்டு திருத்தமுயல்வது, காதலனைத் திருமணம் முடிக்க இயலாத சூழ்நிலையில் இருவரும் மரணத்தைத் தழுவுவது, அல்லது வேறொருவரைத் திருமணம் செய்யாமல் தனியாளாய் இருப்பது, சமூகத்தொண்டு நிறுவனங்களில் சேர்ந்து பணியாற்றுவது என்று காதல் தோல்வியால் துவளும் நிலை இலட்சியக் காதலின் இயல்பாகப் போற்றப்பட்டது. ஏழு பிறவியிலும் இவ்விருவரே இணைந்து வாழ வேண்டும் என விரும்புவது இலட்சியக் காதலின் ஓர் அம்சமாகும். கலைப்படைப்புகள் ஜென்ம ஜென்மமாகக் காதலிக்கும் இலட்சியக் காதலின் வெற்றியைப் போற்றின.

*அன்பின் ஐந்திணைப் படி காதலைப் பாடுபொருளாகக் கொண்ட சங்க இலக்கியத்தில் சான்றோர் பெருமக்களைக் கொண்டு தொகுத்ததால் இலட்சியக் காதல் பாடல்கள் அதிகம் இடம்பெற்றுள்ளன. பொருந்தாக் காதல் பற்றிய பாடல்கள் சிலவற்றை மட்டுமே காண முடிகிறது. மற்றவற்றை வேண்டாம் எனப் புறந்தள்ளி இருக்கலாம். சங்க இலக்கியத்தில் ஒரு தலைவி*

*இம்மை மாறி மறுமை ஆயினும்*
*நீயாகியர் என் கணவனை*
*யானாகியர் நின் நெஞ்சு நேர்பவளே(குறுந்தொகை 49)*

*என்கிறாள். 18, 19ஆம் நுற்றாண்டுகளின் கலைப் படைப்புகள் இலட்சியக் காதலைத் தமது நுவல் பொருளாக்கிக் கொண்டதால் மக்களும் இக் காதலைச் சிறந்த வாழ்வியல் அறமாகப் போற்றினர். இக்காலத்தில் நுகர்வுக் கலாச்சாரம் உலகெங்கும் மதிப்புப் பெற்று விட்டதால் இலட்சியக்காதல் கேலிப் பொருளாகிவிட்டது.*

*காதலுக்கான வரைவிலக்கணம் காலந்தோறும் மாறினாலும் காதல் உணர்வு மனிதர்களை விட்டு மறையவில்லை. காதல் இன்றும் கலைஞர்களின் நிரந்தரக் கருப் பொருளாகி இருப்பதை மறுக்க இயலாது. இரண்டாயிரம் ஆண்டுகளாகச் செம்புலப் பெயல் நீர் போல காதலில் திளைத்து வரும் ஆண்*

*உன்னோடு*
*எனது அரிய பொழுதுகளும்*
*கரைக்கவியலா எழுத்துக்களும்*
*தவிர்க்கப்பட்ட முத்தங்களும்*
*உடன் பயணிக்கின்றன (தவிர்க்கப்பட்ட முத்தங்கள்,* ***காதல் மொழி****)*

*என்று காதலியோடு சேர்ந்து பயணிக்கின்ற காதல், இன்றும் கலையாகவும் நிலையாகவும் வாழ்கின்றது.*

**சுயம் அழித்து சுகம் தரும் காதல்**

காதல் என்பது இருவரின் அகங்காரத்தை அழித்து ஒரே சிந்தனையுடன் ஒரே பாதையில் பயணிக்க வைக்கும் என்ற கருத்தை 'விழைவு' என்ற கவிதையில் முத்தமிழ் விரும்பி எடுத்துக்காட்டுகிறார். ஒருவன் தன் மனதில் யாரும் அறியாமல் மறைத்து வைத்திருக்கும் காதலை இதுவரை திறந்து காட்ட இயலவில்லை; அந்தக் காதலை பிறர்க்கு உணர்த்தி விட்ட பிறகு 'என்' என்ற இறுமாப்பு தொலைந்து விடும். பிறகு அவளும் அவனும் ஒன்றாக இணைந்து விடக்கூடும் என்று நம்புகிறான். இதனையே

*கை மூடி வைத்திருக்க*
*காணக் கிடக்கிறேன்*
*திறந்தபோதில்*
*காணாமல் போவது*
*நானுடன் நீ* **(பூ மர நிழல்)**

என்று கவிதை படைத்துள்ளார். கை மூடி வைத்திருக்கும் காதலைத் திறந்து காட்டி விட்டால் காதல் வெளிப்பட்டு விடும். ஆனால் காதலரின் நான் என்பதும் நீ என்பதும் காணாமல் போய் நாமென்ற சொந்தம் தோன்றிவிடும். காதல் தான் என்னும் அகந்தையைத் தொலைக்கிறது என்ற இவரின் கருத்து புதிது. இவ் அகந்தை தொலைந்தால் இருவரும் அவ்வையார் பாடியது போல 'கருத்தொருமித்த காதலர்' ஆகிவிடுவர். ஈருடல் ஓருயிர் என்பது போல இருவருக்கும் ஒரே உயிர் ஒரே சிந்தனை ஒரே கருத்து என்ற நிலை தோன்றும்.

இவ்வாறாக காதலின் சிறப்பு முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் நுட்பமாக உணர்த்தப்பட்டிருப்பதைக் காணலாம்.



# *காதலில் மலர்ச்சியும் மகிழ்ச்சியும்*

*மகாகவி பாரதியார் காதலின் மேன்மை பற்றி பல பாடல்களை இயற்றியுள்ளார். காதலினால் மனதிற்கு ஏற்படும் மகிழ்ச்சியை வருமாறு விவரிக்கிறார்.*

*காதலினால் மானுடர்க்குக் கலவி யுண்டாம்*
*கலவியிலே மானுடர்க்குக் கவலை தீரும்;*
*காதலினால் மானுடர்க்குக் கவிதை யுண்டாம்;*
*கானமுண்டாம் சிற்பமுதற் கலைக ளுண்டாம்;*
*ஆதலினால் காதல்செய்வீர்; உலகத் தீரே*
*அஃதன்றோ இவ்வுலகத் தலைமை யின்பம்?*
*காதலினால் சாகாம லிருத்தல் கூடும்;*
*கவலைபோம், அதனாலே மரணம் பொய்யாம்*
*(குயில் பாட்டு)*

*காதலே உலகத்தின் தலைமை இன்பம் என்று கூறும் பாரதியாரைப் போல இன்னும் பல கவிஞர்களும் காதலினால் மகிழ்ச்சி மகிழ்ச்சி உண்டு என்பதைத் தெரிவித்துள்ளனர்.*

*முத்தமிழ்விரும்பி தனது கவிதைகளில் ஒரு காதலி காதலினால் தனக்கு உண்டான மனக்கிளர்ச்சியை*

*உயிரின் நிறமா*
*நீ?*

*கவிதை கருவின்*

*வரமா?*
*வான் பூத்து நிற்கும்*
*தேவ மரமா?*

*என்னுள்*
*கிளைத்து விரிந்து*

*கிளர்த்துகிறாய்*

*உயிரை*
*அணுவணுவாய்*
*மலர்த்துகிறாய் கண்ணா (மலர்த்துகிறாய் கண்ணா!,*
***உன்னோடு உரையாடுதல்)***

*என்கிறாள்.*

*You open always*
*petal by petal myself as*
*Spring opens her first rose*

*குமிங்க் (E. E. Cummings) என்ற கவிஞரின் இக்கவிதை வரிகள் முத்தமிழ்விரும்பியின் கவிதை வரிகளோடு ஒப்பிட்டு நோக்கத்தக்கன. ஆனால் வசந்தம் தன்னுடைய முதல் ரோஜாவை மலரச் செய்வது போல நீயும் இதழ் இதழாக என்னை மலர்த்துகிறாய் என்ற ஆங்கிலக் கவிஞனின் கருத்தைக்காட்டிலும்*

*என்னுள்*
*கிளைத்து விரிந்து*
*கிளர்த்துகிறாய்*
*உயிரை*
*அணுஅணுவாய்*
*மலர்த்துகிறாய் கண்ணா (மலர்த்துகிறாய் கண்ணா!,*
***உன்னோடு உரையாடுதல்)***

*என்ற வரிகள் காதலிக்கு காதலனால் ஏற்படும் பூரிப்பையும் மன மகிழ்ச்சியையும் உணர்த்துகின்றது.*

*காதலி தனக்கு மகிழ்ச்சியைப் பரிசளிக்க மறுக்கிறாள் என்பதை அவன் மிகுந்த வேதனையுடன் பாடுகின்ற கவிதையாகப்*

*பேசுவதற்குப்*
*பெரும் வேட்கையுடன்*
*வந்தேன்*
*அழைத்தேன்*

*நீ ஏன்*
*மகிழ்ச்சியைப்*
*பரிசளிக்க மறுக்கிறாய்   (மகிழ்ச்சிப் பரிசு,*
***உன்னோடு உரையாடுதல்)***

*என்று கேட்கின்றான். காதலின் பரிசுகளுள் விலை மதிப்பில்லாதது அதனால் கிடைக்கும் மகிழ்ச்சியாகும்.*

*Love indeed is a light from heaven*
*A spark of that immortal fire*
*with angels shared.*

*என்ற வரிகள் சொர்க்கத்தில் இருந்து கிடைக்கும் புத்தொளியுடன் காதலின் மகிழ்ச்சியை ஒப்பிடுகிறது. அணையாத காதல் ஜோதியின் மேன்மையை ஆங்கிலத்தில் கவிஞர் விதந்து கூறுகிறார். முத்தமிழ்விரும்பி, காதலியின் புன்னகையில் சொர்க்கம் நிச்சயம் என்று உறுதிப்படுத்துகிறார்.*

*வாழ்வு எங்கும் வசந்த உற்சவம்*
*உன் புன்னகை பூவிலே*
*சொர்க்கமும் நிச்சயம்  (தேனடையும் வரலாறு )*

*இவ்வரிகளில் அவளுடைய புன்னகை அவனுடைய வாழ்வில் வசந்த விழாவை நடத்திக் காட்டுவதாகத் தன் காதலின் மகிழ்ச்சியை அவன் வெளிப்படுத்துகிறான்.*

*காதலின் மகிழ்ச்சி இதழ் இதழாக மலர்ந்தது. அதனைப் பாதுகாக்கும் காதலன் அதனை மடித்து எடுத்து மொட்டாக்கி தனது இதயப் பேழையில் எடுத்து வைத்து பாதுகாக்கின்றான்.*

*Let us open our leaves*
*like a flower*
*and be passive*
*and receptive*
*budding patiently*

*என்று ஜான் கீட்ஸ் பாடுவதைப் போல முத்தமிழ்விரும்பி என் காதலனும்*

*மலர்ந்த சொற்களை*
*மடித்தெடுத்து*
*மொட்டாக்கி*
*வைத்துவிடுகிறான்*
*பயணப் பெட்டியில்* *(வானெங்கும் வாசம் வீச,* ***உன்னோடு உரையாடுதல்)***

*அவனது வாழ்க்கைப் பயணத்தில் அவளிடமிருந்து மலர்ந்த சொற்கள் அவனுக்கு மகிழ்ச்சி அளிக்கும் மந்திரச் சொற்களாகப் பாதுகாக்கப்படுகின்றன.*

*ஒரு கவிதையில் கவிஞர் காதலனின் மகிழ்ச்சி போகப்போகக் குறைவதை நிலாவுடன் ஒப்பிட்டுள்ளார்.*

*பார்வையில்*
*பூத்த*
*நிலா*

*தேய்கிறதா? (பார்வையில் பூத்த நிலா)*

*என்ற கவிதை காதலனின் மனதில் பூத்த மகிழ்ச்சி நிலவைப் போல தேய்கிறதா என்ற வினாவை எழுப்புகிறது. அவளே அவன் பார்வையில் பட்ட நிலா. அவளால் பூத்த இன்பம் இப்போது தேய்கிறதோ என்ற கவலை அவனுக்குள் உதித்து விட்டது. இக்கவிதையை மையமாகக் கொண்டு முனைவர் செ.ஞானசேகரன் நெஞ்சில் பூத்த நிலை என்றொரு கட்டுரை எழுதியுள்ளார்.*

*கவிஞர்களால் காதலின் இன்பம் மலரோடும் மலர்ச்சியுடன் ஒப்பிடப்படுகிறது.*

*Life's heat is a blossoming fire*
*Blown bright by thought*
*While gleamed and faded,*
*The infinite desire,*
*Phantamed naught.*

*என்ற வரிகள் வாழ்க்கையின் உயிர்ப்பைப் பூ பூத்த நெருப்பாக உவமிக்கின்றது. காதல் மலர் காதல் சிந்தனைகளால் ஒளி வீசுகின்றது. பின்பு அளவற்ற ஆசையின் காரணமாக வெளுத்து வாடிப் போகின்றது. தமிழிலும் ஆங்கிலத்திலும் blossoming fire மற்றும் பூத்த நிலா என்ற கருத்தாக்கம் உலகெங்கும் காதலைப் பாடும் கவிஞர்கள் ஒரே வகை சிந்தனையுடன் இருப்பதைக் காட்டுகிறது.*

*காதல் சுகானுபவம் மட்டுமல்ல. அது ஆணுக்குப் பெரும் அவதியும் கூட என்று விஞ்ஞானிகள் தெரிவித்துள்ளனர். முத்தமிழ்விரும்பியின் கவிதையில் பெண்ணின் மீது அவன் கொண்டுள்ள காதல் ஈடுபாடு, அவளுக்கும் நெருக்கடியையும் மன அழுத்தத்தையும் கொடுக்கிறது. ஆனால் அவன் அது குறித்து கவலைப்படாமல் அந்த அழுத்தத்தையும் நெருக்கடியையும் அனுபவித்துப் பார், அதனை*

*மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள் என்று காதலிக்குக் கட்டளையிடுகிறான்.*

*பெருங்காதலின் அவதியினால்*
*மிகவும் நெருங்கி*
*அதீத நெருக்கமும்*
*எல்லையற்ற அழுத்தமும்*
*ஈடுபாடும் காட்டுவதைச்*
*சற்று*
*தாங்கித்தான் பாரேன்*

*பெருங்காதலின்*
*பேரன்பின்றி வேறில்லையடி (பெருங்காதலின் பேரன்பு, காதல் மொழி)*

*என்ற வரிகள் மகிழ்ச்சி தரும் அழுத்தத்தை விவரிக்கின்றன.*

*காதல் என்பது சுக வேதனை என்ற கருத்து இருபாலாருக்கும் பொது என்பதனை முத்தமிழ் விரும்பியின் கவிதை வரிகளால் அறிகிறோம்.*

*காதல் காதல் காதல்*
*காதல் போயின் காதல் போயின்*
*சாதல் சாதல் சாதல்*

*என்ற பாரதியாரின் வரிகள் காதலின் வீரியத்தை எடுத்துரைத்தது போல முத்தமிழ் விரும்பியும் தனது கவிதைகளில் 'பெருங்காதலின் அவதி' என்ற வரியால் உணர்த்துகின்றார்.*



## *எல்லாம் நீயே*

*காதலில் திளைப்போருக்கு ஒருவர் மற்றொருவரை எல்லாம் நீயே என்று கருதும் எண்ணம் உருவாகிறது. இத்தகைய எண்ணம் உலகெங்கும் உள்ள காதலர்களுக்கு உருவாகும் பொதுவான எண்ணமாகும்.*

*Love is not an emotion*
*It's your very existence*

*என்றார் ரூமி. காதல் என்பது ஓர் உணர்ச்சி அல்ல. அது தான் என் இருப்பு. நான் இவ்வுலகில் உயிர் வாழ்வதே காதலால் தான் என்கிறார். இவ்வாறு பெண்கள் தங்கள் காதலரை, வருங்காலக் கணவரை எல்லாம் அவரே என்று கருதுவது இயற்கை. தான் ஒருத்தியைக் காதலிக்கும் போது காணுமிடமெல்லாம் அவளே அல்லது அவனே நிறைந்திருப்பது போல எண்ணுகின்ற மன நிலையைக் காதலர் அடைகின்றனர்.*

*மகாகவி பாரதியார்*

*"நெரித்த திரைக்கடலில் நின்முகங் கண்டேன்;*
*நீல விசும்பினிடை நின்முகங் கண்டேன்;*
*திரித்த நுரையினிடை நின்முகங் கண்டேன்;*
*சின்னக் குமிழிகளில் நின்முகங் கண்டேன்;*
*பிரித்துப் பிரிந்துநிதம் மேகம் அளந்தே,*
*பெற்றதுன் முகமன்றிப் பிறிதொன் றில்லை;*

*சிரித்த ஒலியினில் கைவி லக்கியே,*
*திருமித் தழுவியதில் நின்முகங் கண்டேன்.''*
*(கண்ணன் பாட்டு, 17]*

*என்று பாடும்போது வானம் பூமி அனைத்திலும் நாம் அவரது காதல் பிரதிபலிப்பதைக் காண்கிறோம். அதுபோல முத்தமிழ் விரும்பியும் காதலிக்க தொடங்கும் போது காண்பதெல்லாம் அவளாகவே தோன்றுவதைத் தனது கவிதைகளில் அழகாகப் படைத்துள்ளார் .*

*உன்னைத் தேடி வந்த நேரம்*
*தேவன் வரம் தந்தானடி*

*நீ பூச்சூடி கொண்ட வேளை*
*வானம் மேகம் நீலம்*
*யாவும்*
*கண்ணம்மா உன்*
*முகம் தானடி . . . . . (சொர்க்கமும் நிச்சயம்,*
***தேனடையும் வரலாறு****)*

*காதலர்க்கு காதல் உணர்ச்சி விடுதலை உணர்வையும் வானம் கடல் மேகம் காற்று அனைத்தும் இன்பத்தையும் வாரி வழங்குகிறது. இதனால் மதர்ப்புடன் பீடு நடை போடுகின்றனர். அவர்கள் இயற்கையை ரசிக்கத் தொடங்குகின்றனர். தன்னுடைய காதல் துணை தான் காணும் இடமெங்கும் இருப்பது போலத் தோன்றுகிறது. இக்கருத்தை*

*His love was like the blessed liberal air*
*Embracing all to cheer and bless*

*என்று வில்லியம் வர்ப்ஸ்வர்ப் பாடும்போது, காதலரைத் தழுவிச் செல்லும் காற்றுக்கூட ஆசீர்வதிக்கப்பட்ட சுதந்திரமான காற்றாகத் தோன்றுகிறது.*

*முத்தமிழ்விரும்பியின் கவிதையில் ஒரு புதுமையைக் காண்கிறோம். இங்கு அவன் காணுமிடமெல்லாம் அவள் நிறைந்திருப்பதாகப் பாடுவதோடு நிறுத்திவிடாமல் அவளுடைய ஒவ்வொரு செயலிலும் தான் நிறைந்திருப்பதாக அவர் உறுதியுடன் கவிதை படைக்கிறார்.*

*உனது*
*உடலெங்கும்*
*மனசெங்கும்*

*என் விதைகள்.*

*சக்தி*
*ஆற்றல்*

*மறந்தது போல்*
*இருக்கலாம்.*

*ஆனால்*
*மறக்கவா முடியும் ! (என் விதைகள், **தேனடையும் வரலாறு** )*

*என்ற வரிகள் தானே தன் காதலியின் மனோ சக்தியாகவும் உடலை இயக்கும் ஆற்றலாகவும் அவளிடம் நிறைந்திருப்பதாக நம்பி காதலன் பாடுவதைக் காட்டுகின்றன.*

*முத்தமிழ் விரும்பியின் கவிதை நாயகன்*

*எனது*

*நோக்கமின்றி*
*தாக்கமின்றி*

*தொடுதலின்றி*
*அடையாளமின்றி*

*காட்டு*
*ஒரு*
*புள்ளியை*

*பிறகு*
*அதையே*
*கோலமாகக்*
*கொண்டாடுவேன் (காட்டு ஒரு புள்ளியை,*
***தேனடையும் வரலாறு)***

*என்று பாடிய வரிகள் ஒரு பெண் காதலிக்க ஆரம்பித்ததும் அவளுடைய வாழ்வின் நோக்கம், செயல்பாடு, திட்டங்கள், பயணம் என அனைத்திலும் அவள் காதலனின் முத்திரை, ஆதிக்கம் அல்லது அடையாளம் இடம்பெற்று விடுவதைத் தவிர்க்க இயலாது என்பதை உணர்த்துகின்றன. தொல்காப்பியர் இவ்வுணர்சியை 'நோக்குவ எல்லாம் அவையே போறல் [1046]' என்கிறார். ஆக மனித வரலாற்றில் அன்று முதல் இன்று வரை காதலரின் உளவியல் போக்கு மாறவில்லை.*



## ***முத்தம் பல***

*காதலர் இருவர் காதலிக்கத் தொடங்கியதும் அவர்களுக்குள் ஏற்படும் ‘மெய் தொட்டுப் பயிறல்’ என்ற நிகழ்வில் கைகோர்த்தலும் கட்டித் தழுவுதலும் முத்தமிடுதலும் ஓர் அங்கமாக இணைந்து விடுகிறது. தொல்காப்பியர் காதல் தலைவன் பேசும் சூழல்களை வருமாறு வரையறுக்கிறார்.*

*‘மெய் தொட்டுப் பயிறல், பொய் பாராட்டல்’*
*(தொல்.1047)*

*மெய் தொட்டுப் பயிறல் என்பது அவன் அவளது உடம்பைத் தொட்டுப் பழகுவதைக் குறிக்கிறது. காதலியிடம் பெறும் முத்தம் தேனும், பாலும் கலந்த சுவையுடையது என்கிறார் வள்ளுவர்.*

*பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி*
*வாலெயிறு ஊறிய நீர்    (காதற்சிறப்பு உரைத்தல்,*
***குறள் எண்:1121)***

*என்ற குறள் முத்தத்தின் போது வாயில் ஊறும் சுவை நீரின் தித்திப்பை சுட்டுகிறது.*

*திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளில் இருந்து இன்றைய புதுக் கவிதைகள் வரை காதல் குறித்த கவிதைகளில் முத்தம் ஒரு பாடுபொருளாகத் திகழ்கிறது.*

## ***முத்தத்துக்கு முதல் மரியாதை***

*காதலின் முத்திரையாக விளங்கும் முத்தம் ஓர் அன்புப் பரிமாற்றம் ஆகும். 90 சதவீதப் பெண்கள் காதலர் அல்லது கணவருடன் இணைந்திருக்கும் போது முத்தத்தை முதல் வரவாக எதிர்பார்க்கின்றனர். ஆனால் ஆண்களில் 50 % பேர் மட்டுமே முத்தத்துக்கு முதல் மரியாதை அளிக்கின்றனர். முத்தத்தைச் சரியாகத் தராத காரணத்தினால் 59 % ஆண்களும் 66% பெண்களும் தங்களின் காதல் வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டதாகப் புள்ளி விவரங்கள் தெரிவிக்கின்றன. முத்தமே சரியில்லை என்றால் முதல் கோணல் முற்றும் கோணல் என்ற எண்ணம் பெண்களுக்கு தோன்றுகிறது.*

*முத்தம் மூளையில் இருந்து சுரக்கும் மகிழ்ச்சி சுரப்புகளைச் (pleasure harmones) சுரக்கச் செய்கின்றது. நியூரோ டிரான்ஸ்மிட்டர் எனப்படும் செரோடோனின், ஆக்சிடோசின், மற்றும் டோபோமின் சுரப்புகள் முத்தம் தரும்போது சுரக்கின்றன.*

*டோபோமின் சுரப்பு ஒரு வித போதையை ஏற்படுத்துவதால் முத்தமிடுவோர் மேலும் மேலும் தங்களுக்குள் முத்தங்களை பரிமாறிக்கொள்ள ஆசைப்படுகின்றனர். இச்சுரப்பு போதை மருந்துக்கு சமமான உணர்ச்சியைத் தருவதால் இவர்கள் மேலும் மேலும் முத்தத்துக்கு ஆசைப்பட்டு உணவிலும் உறக்கத்திலும் விருப்பமின்றி தவிக்கின்றனர். பாரதியார்*

*பாலும் கசந்ததடி சகியே*
*படுக்கை நொந்ததடீ*
*கோலக் கிளி மொழியும்*
*காதில் குத்தல் எடுத்ததடி*
*பாலத்துச் சோசியனும் கிரகம்*
*படுத்துமென்று விட்டான் (கண்ணன் பாட்டு )*

*எனக் காதலின் தவிப்பை எடுத்துரைக்கும் கவிதை டோபோமின் சுரப்பினால் ஏற்பட்ட உடல் கோளாறைக் குறிக்கின்றது.*

*முத்தமிழ் விரும்பியின் கவிதையில் வரும் காதலன் தூக்கமின்றி நள்ளிருளில் விழித்தவுடன்*

*சமயா சமயத்தில்*
*நினைவலைகள்*
*துள்ளியெழுந்து*
*நனைக்கிறது குளிர்*

*இவள்*
*ராட்சசியா?*
*இல்லை*
*ரட்சகி தான்*
*என்கிறது*

*நள்ளிருள் விழிப்பு (ராட்சசியா?, **காதல் மொழி**)*

*என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டு ஆறுதல் அடைகிறான். மற்றொரு நாள் அவன்*

*இந்த இரவு*
*ஏனிப்படி ஆயிற்றெனத்*
*தெரியாது*

*தனிமை -*

*நெருக்கமும் ஒளியும்*
*கலந்த இருளாகிறது. (ஏனிப்படி ஆயிற்று? **காதல் மொழி**)*

*என்கிறான். முத்தமிழ் விரும்பியின் இக் கவிதை காதலியோடு எப்போதும் சேர்ந்து இருக்க வேண்டும் என்று ஆசைப்படும் அந்தக் காதலனின் ஏக்கத்தை*

*உணர்த்துகின்றது. அவனது தூக்கமற்ற இரவுகள் அவன் அவளுக்குக் கொடுத்த முத்தத்தால் சுரந்த டோபோமினின் விளைவுகள் ஆகும்.*

*காதலர் தமக்குள் முத்தமிடும் போது மூளையில் இன்னொரு சுரப்பு சுரக்கிறது. அதன் பெயர் செரோடோனின். இச் செரோடோனின் சுரப்பு முத்தமிட்டவரைப் பற்றியே தொடர்ந்து எப்போதும் நினைத்துக் கொண்டிருக்கத் தூண்டும்.*

*அள்ளியெடுத்துப் போ*
*இல்லை*
*கிள்ளி எறிய வா*

*இல்லாத வானம்*
*இருந்தென்ன*
*ஊசல் (இல்லாத வானம், **உன்னோடு உரையாடுதல்**)*

*என்ற கவிதையில் வானம் இல்லாதபோது ஊசல் இருந்து என்ன பயன் என்று காதலன் கேட்கிறான். இக்கேள்வி நீ இல்லாமல் நான் எதற்கு என்று தொனிக்கிறது. காதலியோடு அவன் எப்போதும் இணைந்திருக்க வேண்டுமென்ற அவனது ஆவல் தீராததனால் இவ்வாறு கேட்கிறான். இந்த ஆவல் தோன்றுவதற்குக் காரணம் மூளைக்குள் உண்டாகும் செரட்டோனின் உற்பத்தியே ஆகும். இந்த செரட்டோனின் சுரப்புக்கு காதலன் அல்லது காதலியின் காதல் ததும்பும் பார்வை அல்லது ஒரு குறும்புச் சொல் கூட காரணமாக அமையும் என்கிறது அறிவியல். அப்போது அந்தச் சொல்லும் பார்வையும் அவர்களின் மனதில் நீங்கா இடம் பெற்றுவிடும்.*

*முத்தமிழ் விரும்பியின் கவிதை காதலி சொன்ன ஒரு சொல் அவளது காதலனின் நெஞ்சத்தில் ஆழமாகப்*

*பதிந்து விட்டது. அவன் அச்சொல்லை நினைந்து நினைந்து இன்புறுகிறான். அவள் சொன்ன சொல்,*

*மாலைக் காலத்தில்*
*வரும்*
*சிறுமழையில்*
*மேனி முழுவதும்*
*பரவிச் சிலிர்க்கும் மெல்லிய*
*ஈரம்*

*அவளது குறும்புச் சொல் (தேனான பெண்,*
***உன்னோடு உரையாடுதல்)***

*எனத் அவனுக்குத் தோன்றுகிறது. மாலைக்காலத்துச் சிறு மழையின் மெல்லிய ஈரத்தை ரசித்த இயற்கை நேசருக்கே இவ்வுவமை தோன்றும்.*

*செரோடோனின், டோபோமின் போன்றவைச் சுரக்கும் போது மன அழுத்தத்தைத் தரக்கூடிய கார்டிசோல் என்ற சுரப்பு குறைந்து விடுகிறது. இதனால் முத்தம் தருபவர்கள் மகிழ்ச்சியில் திளைக்கின்றனர். அவர்களிடமிருந்து துன்ப உணர்வுகள் விலகி உற்சாகம் தலைதூக்குகிறது. இதனால் ஏழை பணக்காரன் படித்தவன் படிக்காதவன் என அனைவருக்கும் முத்தம் ஒரே மாதிரியான சுக போதையை ஏற்படுத்துகிறது .*

*மூளையில் இருந்து சுரக்கும் இன்னொரு சுரப்பி ஆக்சிடோசின் ஆகும். இது பிரசவத்தின் போதும் தாய் குழந்தைக்குப் பாலூட்டும் போதும் சுரக்கும். பசு மாட்டில் அதிக பால் கறக்க வேண்டும் என்று நினைப்பவர்கள் ஆக்சிடோசின் ஊசியை மாட்டுக்குப் போடுவார்கள். இச் சுரப்பு முத்தமிடுவோருக்கு இடையில் ஆழமான பிணைப்பை ஏற்படுத்தும். இவர்கள் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாது வாழ்நாள் முழுவதும் இணைந்து இருக்கும் எண்ணத்தைப்*

பெறுவர். இதனால் இவர்களுக்குள் நீண்டகால பந்தம் உண்டாகும். இப்பந்தம் தரும் பாதுகாப்பு உணர்வினால் நீண்ட ஆயுளும் இவர்களுக்குக் கிடைக்கும். இவ்வாறு சுரப்பிகள் இருவருக்கும் சரியான அளவில் சுரக்கும்போது இக் காதலர் நீண்டகால சுக வாழ்வைப் பெறுகின்றனர். முற்காலத்தில் வயதான மணமொத்த தம்பதிகள் பலர் வாழ்ந்ததற்கு ஆக்சிடோசின் சுரப்பு ஒரு முக்கிய காரணமாகும்.

## முத்தத்தின் அறிவியல்

அறிவியல் பிரிவுகளில் முத்தம் பற்றிய அறிவியல் *Philematology* என்று அழைக்கப்படுகிறது. முத்தத்தின் அறிவியல் பெயர் *Osculation* என்பதாகும். முத்தவியல் துறையைச் சேர்ந்த அறிஞரை *Osculotogist* என்பர். முத்தம் தரும்போது முகத்தில் உள்ள முப்பத்துநான்கு தசைகளும் மொத்த உடம்பில் 146 தசைகளும் இயங்குகின்றன என முத்தம் பற்றி ஆராயும் ஆராய்ச்சியாளர்கள் தெரிவிக்கின்றனர்.

## முத்தத்தின் அருங்கொடை

முத்தம் என்பது மனிதனின் காதல் வாழ்வில் தனி முத்திரையாகக் கருதப்படுவதால் அவனது வாழ்க்கையைத் தீர்மானிப்பதில் முத்தம் முக்கிய இடத்தைப் பெறுகிறது. பெண்கள் தங்களின் நோயெதிர்ப்புச் சக்திக்கு எதிரான நோய் எதிர்ப்பு சக்தி மரபுக்கு கூறு (MHC genes) உடைய ஆண்களையே முத்தமிட விரும்புகின்றனர். இதற்கு முக்கியக் காரணம் கண்களுக்குக் கீழே இருக்கும் மதநீர் சுரப்பி முத்தமிடும்போது ஏற்படுத்தும் வாசனையாகும். தன் காதலனின் இந்த வாசனையை விரும்புகின்ற ஒரு பெண் தொடர்ந்து அந்த ஆணை மட்டுமே முத்தமிட விரும்புவாள். வாழ்நாள் முழுக்க அவரோடு இணைந்திருக்க விரும்புவாள். அவரையே வாழ்க்கைத்

துணையாகவும் ஏற்றுக்கொள்வாள். இவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் நோய் எதிர்ப்பு சக்தி மிக்கவர்களாக இருப்பார்கள். எனவே முத்தம் என்பது ஆரோக்கியமான குழந்தைகளைப் பெற்று மனித சமுதாயத்துக்கு ஆக்கம் விளைவிப்பதற்கான அச்சாரமாக விளங்குகின்றது. இதைத்தான் திரைப்படங்களில் கெமிஸ்ட்ரி என்று அழைக்கின்றனர். இது வெறும் கெமிஸ்ட்ரி அல்ல. மூளையில் உண்டாகும் வேதிப்பொருட்களால் ஏற்படும் கெமிஸ்ட்ரி ஆகும். எனவே முத்தம் என்பதைக் கணநேர விருப்பம் என்றோ கலவியின் தொடக்கம் என்றோ புரிந்து கொள்ளக் கூடாது. முத்தம் என்பது மனித சமுதாயத்தின் குடும்ப நல ஆரோக்கியத்துக்கான வழிகாட்டி ஆகும்.

இருவர் தங்களுக்குள் முத்தமிட்டுக் கொள்ளும் போது அவர்களின் ஐம்புலன்களும் செயல்படுகின்றன. அப்போது எபினீஃபரின், நோரிபினீஃபரின் என்ற இரண்டு சுரப்பிகள் சுரக்கின்றன. முத்தமிடும்போது அட்ரீனலினும் சுரப்பதால் மூளைக்கு அதிகமாக செல்லும் ஆக்சிஜன் இதயத்தில் படபடப்பை ஏற்படுத்துகிறது. சிலருக்கு மூட்டுகள் தளர்கின்றன. முத்தமிடும் போது இருவருக்கு இடையிலும் உள்ளப் பிணைப்பும் பாதுகாப்புணர்வும் உண்டாகிறது. உதடுகள் மிகவும் மென்மையான உறுப்பு என்பதாலும் மூளையின் சொமேட்டோ சென்சரி கார்டெக்சை தூண்டக்கூடிய நரம்புகள் உதடுகளில் முடிவடைவதாலும் முத்தம் உடலியக்கத்தின் செயற்பாட்டுக்குத் தூண்டுகோலாக அமைகிறது.

## அன்பு முத்தம், காதல் முத்தம்

மானுடவியலார் முத்தத்தை பிளாட்டானிக் என்றும் ரொமான்டிக் என்றும் வகைப்படுத்துகின்றனர். பிளாட்டானிக் முத்தம் என்பது தாய் குழந்தை சகோதரர் நண்பர்கள் போன்றோருக்கு இடையில் பரிமாறப்படும்

அன்பு முத்தம் ஆகும். இவ்வகை முத்தம் நெற்றி, கன்னம், உள்ளங்கை ஆகியவற்றில் கொடுக்கப்படுகிறது. வியாட்நாமியர், எஸ்கிமோக்கல், சீனர் ஜப்பானியர் போன்றோர் மூக்குடன் மூக்கை உரசி முத்தம் கொடுப்பதும் உண்டு. ரொமான்டிக் முத்தம் என்பது காதலர், கணவன் மனைவியர் தரும் முத்தம் ஆகும்.

முத்தமிழ் விரும்பியின் சமூக கவிதை ஒன்றில் சிறியவனாக இருக்கும் ஒருவன் பெரியவர்களோடு போட்டிப் போடுவதைக் கூடாது என்று அறிவுரை கூறும்போது நீ பெரியவன் ஆனதும் உனக்கு அவர்கள் மென் முத்தம் தரலாம் எனக் குறிப்பிட்டுள்ளது. இந்த மென் முத்தம் பிளேட்டானிக் வகையைச் சேர்ந்த அன்பு முத்தம் ஆகும்.

**காதல் முத்தத்தின் போது**

முத்தம் கொடுக்கும்போது அண்ணாந்து இருப்பதும் தலையை வலது புறமாக சாய்ப்பதும் கண்களை மூடிக் கொள்வதும் பொதுவாக காணப்படும் நடைமுறைகள் ஆகும். இதற்கும் அறிவியலாளர் காரணம் கண்டறிந்துள்ளனர். பாலூட்டும் தாய்மார் அதிக அளவில் தங்கள் இடது பக்கமே குழந்தைகளை வைத்து பாலூட்டுவதால் குழந்தைகள் தன் தலையை ஆரம்பத்திலிருந்து வலதுபுறமாகத் திருப்பிப் பழகிவிட்டன. எனவே முத்தமிடுவோர் தன் முகத்துக்கு அருகில் மற்றொருவர் முகம் வந்ததும் தன்னிச்சையாக அண்ணாந்து வலதுபுறம் தலையைத் திருப்பிக் கொடுக்கின்றனர். கண்ணுக்குள் கண்மணி விரிவடைவதால் கண்களைத் திறக்க இயலாமல் மூடிக் கொள்கின்றனர். கண்களுக்குள் இரத்த ஓட்டம் அதிகமாவதால் வெப்பம் பரவுவதாக உணர்கின்றனர். இதனாலும் அவர்களால் கண்களைத் திறக்க

முடிவதில்லை. மூடிய கண்களின் மீதும் இன்னொரு முத்தத்தை உபரியாகப் பெற்றுக்கொள்கின்றனர்.

## முத்தத்தின் தோற்றமும் நடைமுறையும்

இவ்வுலகில் முத்தத்தின் தோற்றத்தை ஆராய்ந்த விஞ்ஞானிகள் ஆரம்பத்தில் குழந்தைகளுக்கு உணவை மென்று வாயில் கொடுப்பதில் இருந்து முத்தத்தின் வரலாறுத் தொடங்குவதாக தெரிவிக்கின்றனர். மனிதர்கள் மட்டுமல்லாது விலங்குகளும் பறவைகளும் தங்களுக்குள் முத்தம் கொடுப்பது உண்டு. குறிப்பாக மனிதனுக்கு மிக நெருக்கமான சிம்பன்சி மற்றும் போனோபோ குரங்குகள் தங்கள் இணைகளுக்கு காதல் முத்தம் கொடுக்கின்றன. அவை தமது சமூக வாழ்விலும் அன்பு முத்தங்களைப் பரிமாறிக் கொள்கின்றன. இணை விழைச்சுக் காலத்தில் பெண் விலங்குகளின் கீழ் உதட்டுச் சிவப்பு ஆண் விலங்குகளை முத்தமிட ஈர்க்கின்றது.

## முத்தமும் உதட்டுச் சிவப்பும்

மனித வரலாற்றில் பெண்களுடைய கருவுறும் காலத்தில் அவர்களின் கண்ணுக்குக் கீழிருக்கும் மதநீர் சுரப்பின் காரணமாக கன்னங்கள் பூரித்து மினுமினுக்கும். உதடுகள் அதிக இரத்த ஓட்டம் காரணமாக சிவந்து ஆண்களை ஈர்க்கின்றது. செயற்கையாகவும் பெண்கள் தம் உதடுகளைச் சிவப்பாக்கி கொள்கின்றனர். வடநாட்டில் சுமங்கலிகள் முன்பு வெற்றிலைப் பாக்கு போட்டனர். பின்னர் உதட்டுச் சாயம் பூசினர். தமிழ்நாட்டில் நாட்டுப்புற இலக்கியத்தில் வெற்றிலைப் பாக்கு போடுவதென்பது பாலுறவின் குறியீடாக விளங்குகிறது.

முத்தமிழ் விரும்பியின் கவிதையில் நாட்டுப்புற நாயகன் தன் காதலியிடம்

*தஞ்சாவூர் வெத்தல வெத்தல*
*ராவைப் போல பத்தல பத்தல (தேனடையும் வரலாறு)*

*என்று சொல்லி அன்றிரவு அவளோடு கூடிக்களிக்கத் திட்டமிடுகிறான்.*

*வெற்றிலை போடுவதால் அதிகமாக சிவக்கும் உதடு பெண்களின் பாலியல் திறனை வெளிப்படுத்தும் குறியீடாவதன் காரணம் அவள் அப்போது கருவுறும் காலத்தில் இருக்கிறாள் என்பதாகும்.*

## ***முத்தத்தின் வகைகள்***

*முத்தமிழ் விரும்பியின் காதல் கவிதைகளில் பலவகையான முத்தங்கள் இடம்பெற்றுள்ளன. மென் முத்தம், நெகிழி முத்தம், மறு முத்தம், வார்த்தை முத்தம், வாயமுதம் தவிர்க்கப்பட்ட முத்தம், சத்தம் போடாம தரும் முத்தம் என விதவிதமான முத்தங்களைக் காண்கிறோம்,*

*காற்றைச் சூடாக்குகிறது*
*முன்பகல் வெயில்*

*இந்த மென்காற்றில்*
*கரைகின்றன*
*நெகிழி முத்தங்கள் (நெகிழி முத்தங்கள், **உன்னோடு உரையாடுதல்**)*

*என்ற வரிகளில் வெயில் காலத்தில் வீசும் மென்மையான காற்றில் பறக்கும் இளகிய நெகிழி முத்தங்களைக் காட்டுகிறார்.*

## ***முத்தத்தின் விலை***

*முத்தத்தின் விலை அப்பெண்ணின் வாழ்க்கை என்று ரூமி எனும் தத்துவ ஞானி பாடினார். அவன் அவளுக்கு ஒரு முத்தம் தர விரும்புகின்றான். ஆனால் அப்படி ஒரு*

*முத்தம் கொடுத்து விட்டால் பிறகு அவள் தன்னுடைய வாழ்க்கையையே அதற்கு விலையாகக் கொடுத்து விடுவாள்.*

*I would like to kiss you*
*The price of kissing you is your life.*

*என்கிறது ஓர் ஆங்கிலக் கவிதை. ஒருவனை முத்தம் கொடுக்க அனுமதித்த பிறகு அப்பெண் வேறு ஒருவருடன் இணைந்து வாழ சம்மதிக்க மாட்டாள் என்பது பொதுவான நடைமுறை உண்மையாகும். இதனால் முத்தம் அவர்களின் இணைபிரியாத வாழ்க்கைக்கு முன்னுரை எழுதிவிடுகிறது.*

*முத்தமிழ் விரும்பியின் கவிதை நாயகன் தனிமை விளைவித்த ஏக்கத்தினால் தவிக்கும்போது நிஜ முத்தம் அல்ல வார்த்தை முத்தம் தா கேட்கின்றான். என் தனிமையை போக்க ஆறுதலாக ஒரு வார்த்தை பேச மாட்டாயா என்று சராசரி காதலன் கேட்பதைக் கவிஞர் வார்த்தை முத்தம் எனக்கு கூறி அதன் தகுதியை உயர்த்தி விட்டார்,*

*தனித்த பொழுதுகள்*
*எரிக்கின்றன*

*எரிக்கும் நினைவுகள்*
*துணையாய்*
*பிரிக்கும் இழைகள் காணும் நேரம்*

*வரம் அல்ல*
*வார்த்தை முத்தம் தா(வார்த்தை முத்தம் தா,* ***காதல்மொழி****)*

*என்ற கவிதை காதலனின் ஏக்கத்தையும் அவனது எதிர்பார்ப்பையும் கவினுற உணர்த்துகின்றது.*

ஜான் கீட்ஸ் தன் காதலியிடம் இப்போதைக்கு ஒரு மென் முத்தம் தா. அதுவே எனக்கு எல்லையற்ற இன்பத்தை வழங்கும் என்கிறான்.

*Now a soft kiss _Aye*
*By that kiss*
*I vow an eternal bliss*

இக்கவிதையில் காதலன் தன் வாழ்வை வரமாக்க ஒரு மென் முத்தம் வேண்டுகிறான். முத்தமிழ் விரும்பியின் காதல் நாயகனும்

இற்றைக் கணத்தில்
இடர் களைய
வாயமுதமல்ல

கண்ணே!
வாழ்வமுதம் தா (வாழ்வமுதம் தா, காதல் மொழி)

என்று கேட்கும்போது அவன் கேட்பது அவளால் பெறக்கூடிய அன்பான அழகான வாழ்க்கை. காதல் இன்பத்திற்கான முத்தத்தைக் கேட்காமல் வாழ்நாள் முழுக்க மகிழ்ச்சியோடு இருப்பதற்கான உன்னத இணைப்பை வேண்டுகிறான். இக்காதலன் இப்போதைக்கு ஒரு மென் முத்தம் கொடு என்று அச்சாரம் போடவில்லை. நேரடியாகவே வாழ்வமுதம் தா என்று கோரிக்கை வைக்கிறான்.

**மறுமுத்தம்**

முத்தம் என்பது பலரும் கேள்விப்பட்ட அன்புப் பரிசாகும். ஆனால் மறு முத்தம் என்பது கவிஞர் முத்தமிழ் விரும்பியின் புதிய படைப்பாகும். காதலியிடம் பேசாமல் அமைதியாக இருக்கும் ஒரு காதலன் தன்னுடைய அமைதியைப் புரிந்து கொள்ளாத அவளிடம் என் மௌனத்தை புரிந்துகொள்ள இயலாத

*உன்னால் என் வார்த்தைகளை எவ்வாறு புரிந்து கொள்ள முடியும் என்று கேட்பதைப் போல ஒரு பட்டியலிடுகிறான்,*

*சண்டை வேறு*
*சமாதானம் வேறு*

*மௌனம்*
*வேறு*

*மறுத்தல் வேறு*

*முத்தம் வேறு*
*மறுமுத்தம் வேறு*

*கன்னல் மொழி தானே*
*கடுஞ்சொல் ஆகிறது*

*கனியிருப்பக்*
*காய்ச் சுவை*
*ரசமா?*
*குறைவா?*
*வாழ்வா?*
*வரமா? (வாழ்வா? வரமா?, **காதல் மொழி**)*

*என்று அவன் கேட்கும்போது பேசாமல் இருப்பதனை காய் என நினைத்துக் காதலி கடிதல் கூடாது. மௌனமும் ஒரு மறுமொழி தான். அதுவும் காதல் ரசங்களில் ஒன்றே. மௌனம் என்பது மறுத்தல் ஆகாது. அது ஒரு முத்தத்துக்கு கொடுத்த மறு முத்தமாகக் கொள்ளப்பட வேண்டியது என்று இக்கவிதை விளக்கிச் செல்கின்றது.*

*ஒருவர் முத்தமிட்டால் அதனைப் பெற்றுக் கொண்டவர் மறு முத்தம் தரவேண்டும் என்ற கருத்தை இவ்வரிகள் உணர்த்துகின்றன. முத்தம் என்பது*

இருவருக்கும் பொதுவானது என்ற நம்பிக்கையையும் கவிஞர் இங்கு சுட்டிக்காட்டுகிறார். திருமணம் முதலான நிகழ்ச்சிகளில் அன்பளிப்பு தந்தவர்களுக்கு *Return gift* என்று மறு அன்பளிப்பு தரும் வழக்கம் உண்டு. அது போல இங்கு *return kiss* ஒரு கோரிக்கையாக முன் வைக்கப்படுகிறது. ஏனெனில் திரையிசைப் பாடல் ஒன்று சுட்டுவதைப் போல,

இன்பம் என்பது இருவரின் உரிமை
யார் கேட்டாலும்
இளமைக்குப் பெருமை.

பாராட்டு முத்தம்

காதலியின் செயல் திறன் கண்டு அவளது வினைத் திட்பத்தைப் பாராட்ட நினைக்கும் ஒரு காதலன் அவளுக்கு முத்தத்தைப் பரிசாக வழங்குகின்றான் அவன்.

அழுத்தமாகத் திரும்பத் திரும்ப கையிலும் காலிலும் முத்தம் கொடுத்ததனால் அவளது ரேகைகளும் நரம்போட்டமும் காணாமல் போயிருக்கக் கூடும் என்ற ஐயமும் அவனுக்குத் தோன்றுகிறது.

உன் உள்ளங்கையில்

கொலுசேறி நிற்கும்
கணுக்காலில்

முத்தமிடுகிறேன்

உள்ளங்கை ரேகை
மற்றும் கணுக்கால் நரம்போட்டத்தை
காணவில்லை
எனப்
புகார் செய்யாதே (களப்பணி, தேனடையும் வரலாறு)

என்று காதலியிடம் வேண்டுகோள் விடுக்கிறான்.

*ஆசை தீர அவளுக்கு முத்தங்கள் கொடுத்தபிறகு அவனுக்கு உண்டான ஐயத்தை கவிஞர் இவ்வாறாகத் தன் கவிதையில் உணர்த்துகிறார்.*

## ***முத்தத்தின் நீட்சி***

*முத்தம் என்பது ஒரு நிகழ்வாக மட்டும் நின்றுவிடுவதில்லை. அது சில சமயத்தில் ஒரு முகவுரையாகத் தொடங்கி முழுக் கதையும் எழுதி முடிந்துவிடும்.*

*தேனடையும் வரலாறு என்ற தொகுப்பில் நாட்டுப்புறச் சாயலில் காதல் கவிதையில்*

*சத்தம் போடாம*

*முத்தம் ஒன்னு*

*முத்தமிடாமே*

*சத்தம் வேணாம் (சத்தம் போடாம முத்தம் ஒண்ணு,*
***தேனடையும் வரலாறு****)*

*என்ற வரிகள் நாட்டுப்புறக் காதலர் இருவர் இரவில் சந்தித்து உரையாடும் சூழலில் இடம் பெற்றுள்ளன.*

*இரவு என்பதால் எவருக்கும் கேட்காமல் சத்தமில்லாமல் ஒரு முத்தம் கொடு என்று கேட்கும் காதலன் அந்த நொடியிலேயே சத்தம் இல்லை என்றால் அது முத்தமே அல்ல என்பதை உணர்ந்தவனாக*

*முத்தமிடாம*
*சத்தம் வேணாம்*

*என்கிறான். இவன் இது போலத் தான் நேற்றும் தொடங்கினான். முத்தத்தில் தொடங்கி தொடர்கதையாகிக் கொண்டு போகிறது என்று அவள்*

அஞ்சுகிறாள். தொல்காப்பியத்தில் களவு காலம் மூன்று மாதமாக வரையறுக்கப்பட்டது. அதற்குப் பிறகு ஊர் அலர் தூற்ற ஆரம்பிக்கும். ஆனால் அவனோ எவ்வித அச்சமுமின்றி அவளிடம் மீண்டும் இன்றிரவு முத்தத்தில் இருந்து தொடங்குகிறான்.

ராவு துடிக்குது
நெஞ்சு போல

குஞ்சம் வச்ச
சேலை வேணாம்

பாலும் தேனும்
எனக்கு வேணாம்
பாக்கு வெத்தலை
மடிச்சு குடு

மடி நெறைய
மணலு தண்ணீ

ஊத்தம் எடுக்கும்
நேரத்துல

பார்த்துப் பழகு
புதுசு பதம்

நேத்துப் போல
காயம் படும் (சத்தம் போடாம முத்தம் ஒண்ணு, **தேனடையும் வரலாறு**)

என்று சொல்லும் போது முத்தம் சத்தமாகக் கொடுத்தாலும் சத்தமின்றி கொடுத்தாலும் வெறும் முத்தத்தோடு நின்று விடப் போவதில்லை. அது நேற்றைய இரவைப் போல கதை பல சொல்லும் என்பது அவளுக்குத் தெளிவாகிவிட்டது.

**வாயமுதம்**

*மாயா ஏஞ்சலோ என்ற பெண் கவிஞர் முத்தத்தை கிறிஸ்துமஸ் மரத்தில் கட்டி தொங்கவிடப்படும் வண்ண உருண்டைகளுக்கு ஒப்பிட்டு ஒரு கவிதைப் படைத்துள்ளார். அவர் முத்தங்களை களவாடிய முத்தங்கள் என்கிறார்.*

*When You Come*

*When you come to me*
*Unbidden*
*Beckoning*
*Me,*
*To long-ago rooms,*
*Where memories lie*
*Offering me,*
*As to a child*
*An attick,*
*Gatherings of days too few*
*Daubles of stolen kisses*

*Trinkets of borrowed loves*
*Trunks of secrets words*
*I cry*

*முத்தத்தைப் பாடாத கவிஞர்களே இல்லை. எனினும் முத்தமிழ்விரும்பி முத்தத்தால் மரணமிலாப் பெருவாழ்வு கிடைக்கும் என்று கூறியது புதுமையான கருத்தாகும். அமுதம் போல முடிவில்லா இன்பத்தை வழங்கக் கூடியது பெண்ணிடம் பெறும் முத்தம் என்பதால் முத்தமிழ்விரும்பியின் நாயகனும்,*

*வாயமுதம் வேண்டி*
*உன்னை*
*வேண்டிகிட்டேன்*
*வெரசா வாடி (சத்தம் போடாம முத்தம் ஒண்ணு,*
***தேனடையும் வரலாறு)***

*என்று தனக்குக் கல்யாணம் செய்ய நிச்சயமான பெண்ணை அழைக்கிறான். நிச்சயம் தானே நடந்திருக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லையே என்று அவள் தயங்குகிறாள்.*

*கல்யாண காலம்*
*ஆவணியில்*

*ஆடி மாதம் அம்மாவாசை*

*ஆடித் திருவிழா*
*ஊருக்குள்ளே*

*யாருமில்ல யாருமில்ல*
*ஊரு சனம்*
*யாருமில்ல (சத்தம் போடாம முத்தம் ஒண்ணு,*
***தேனடையும் வரலாறு)***

*என்றவன் அவளை 'விரைவாக வா, யாரும் இல்லை' என்று அவசரப்படுத்திய போது அவள்*

*அக்கம்பக்கம்*
*கூகை ஒன்னு (சத்தம் போடாம முத்தம் ஒண்ணு,*
***தேனடையும் வரலாறு)***

*என்று இரவுப் பறவையான கூகை ஒன்று இருக்கிறதே என்கிறாள். மேலும்*

*கொண்டை கலஞ்சா*
*அம்மா கேட்பாள் . . . . .  (சத்தம் போடாம முத்தம்*
*ஒண்ணு, **தேனடையும் வரலாறு**)*

*என்கிறாள். சங்க இலக்கியத்தில் தலைவிக்குத் தலை சீவும் போது அவள் கூந்தலில் மலர் மணம் வீசுவதைக் கண்டு அவள் எவனிடமோ கூடி மகிழ்ந்ததன் இரகசியத்தைத் தாய் அறிந்துகொள்வாள். அக்காலத்தில் கன்னிப் பெண்கள் தலையில் பூச் சூடுவதில்லை. காதல் காணவனே முதலில் பூச் சூட்டுவான். இன்றும் திருமண நிச்சயதார்த்தத்தை பூ வைத்தல் என்று சொல்வது சங்க இலக்கியத்தின் தொடர்ச்சியாக வரும் சடங்காகும். ஆக தலை முடி கலைந்தாலும் மலர் மணம் வீசினாலும் தாய்க்கு இவளது காதல் தெரிந்துவிடும். அவன் சரி,*

*இப்போ*
*சும்மா இருந்து*
*என்ன பண்ண  (சத்தம் போடாம முத்தம் ஒண்ணு,*
***தேனடையும் வரலாறு**)*

*என்று அவளிடமே கேட்கிறான்*

*தூக்கம் வருமா*
*ராவுக்குள்ள*

*காஞ்ச மிளகாய்*
*காரமில்ல - உன்*
*நெஞ்சுக்குள்ள*
*ஈரமில்ல  (சத்தம் போடாம முத்தம் ஒண்ணு,*
***தேனடையும் வரலாறு**)*

*என்று அவளைக் குற்றம் சாட்டுகிறான். அடுத்த ஆவணி மாதம் திருமணம் என்பதால் அவன் அவளிடம் துணிந்து கேட்கிறான். இவ்வாறாக முத்தத்தை அச்சாரமாகக் கொடுத்து காதலன் தன் காதலியை உரிமை*

கொண்டாடும் பழக்கம் ஆரம்ப காலம் தொட்டு இருந்துவருகிறது. அவள் தரும் ஒவ்வொரு முத்தமும் முன்பு அவள் கொடுத்ததை விட கூடுதல் சுவை கொண்டதாகவே இருக்கிறது என்கிறார் ஜான் கீட்ஸ்.

*You are always new*
*The last of your kisses*
*Was ever the sweetest.*

இவ்வாறாக கவிஞர் முத்தமிழ்விரும்பியின் கவிதை காதலர்கள் காதல் முத்தம், அன்பு முத்தம், பாராட்டு முத்தம், மென்முத்தம், நெகிழி முத்தம், வார்த்தை முத்தம் என பலவகையான முத்தங்களை பரிமாறிக் கொள்கின்றனர்.



*அறைவாயில் உட்பு குந்தேன்*

*அத்தான்,*
*தன் கையால் அள்ளி*

*நிறைவாயின் அமுது கேட்டுக்*
*கனி*
*இதழ் நெடிதுறிஞ்சி*

*மறைவாக்கிக் கதவை, என்னை*
*மணிவிளக்கொளியிற் கண்டு*

*நறுமலர்ப் பஞ்சணைமேல்*
*நலியாதுட்கார வைத்தான்.*

*- பாரதிதாசன்*



## உரையாடல் சிறப்பு

காதலர் எப்போதும் தமக்குள்ள கருத்து பரிமாற்றமும் காதல் பரிமாற்றமும் நடத்திக் கொண்டு இருக்கின்றனர். இதற்குக் கால் நேரம் என்று எதுவும் இல்லை. நேரிலோ தொலைபேசியிலோ நண்பர்கள் மூலமாகவோ சில சமயங்களில் இப்பரிமாற்றங்கள் நடைபெறுகின்றன. முத்தமிழ் விரும்பியின் கவிதைகள் காதலருக்கிடையே உரையாடல் மூலமாகக் காதல் பரிமாற்றம் நடந்த வித்தையை அழகுற கவித்துவமாக உணர்த்துகின்றன. உரையாடல் குறித்து திருவள்ளுவர் காமத்துப்பாலில் குறிப்பறிதல் என்ற அதிகாரத்தில்

கண்ணோடு கண்ணினை நோக்கொக்கின்
வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல (1100)

என்றார். ஆங்கிலக் கவிஞர்களும் காதலர்களுக்கு இடையே காதலைப் பரிமாறிக்கொள்ள கண்களே போதுமானவை எனக்கருதி

*I have never had a conversation as deep as the one,*
*I had with your eyes while we said nothing at all.*

என்றும்

*Sometimes from her eyes*
*I did receive fair, speechless messages (William Shakespeare)*

*என்றும் கூறியுள்ளனர். காதலர்கள் ஒருவரோடு ஒருவர் பேசாமலேயே தன் கண்களால் வாழ்த்துக்களைப் பரிமாறிக் கொள்கின்றனர். அதே வேளையில் அவர்கள் எப்போதும் ஒருவரோடு ஒருவர் பேசிக் கொண்டிருப்பதைத் தான் விரும்புகின்றனர். இவ்வாறு பேசுவதை ஸ்வீட் நத்திங்ஸ் (Sweet nothings) என்று ஆங்கிலத்தில் குறிப்பிடுவர். முத்தமிழ் விரும்பியின் காதல் கவிதைகளில் உரையாடல் பற்றி ஏராளமான கவிதைகளும், கவிதைவரிகளும் உள்ளன. அவரது கவிதைகளில் உரையாடலுக்குச் சிறப்பான விளக்கமும் கொடுக்கப்படுகிறதை,*

> *பார்க்காமல்*
> *பதிலிடாமல்*
> *பேசாமல் இருப்பதுதான்*
> *ஆழ்மன விருப்பின்*
> *உரையாடும் சூழல் (உரையாடும் சூழல்,* ***காதல் மொழி****)*

*என்ற கவிதை உரையாடல் என்பது சொற்களால் பரிமாறிக் கொள்ளப்படும் தொடர்பியல் முறை அன்று. மௌனமாக இருப்பதுக் கூட உரையாடல்தான் என்று காதலர்கள் வழியில் நின்று புதியதோர் இலக்கணம் தருகிறார். இதே கருத்தை ரிச்சர்டு ஹென்றி ஸ்டோடார்டும்,*

> *Silence is the speech of love*
> *The music of the spheres above*

*என்றார்.*

*உரையாடும்போது ஆங்கிலத்தில் சொல்வது போல ஸ்வீட் நத்திங் என்று அமையாமல் தேர்ந்தெடுத்த சொற்களைக் கொண்டு அன்பாக அமைதியாக பேச வேண்டும் என்பது கவிஞரின் எண்ணமாக இருப்பதனால்*

*மெது மெதுவாகச்*
*சொற்களைக் கண்டடைந்து*
*உரையாட விழைய (மெல்ல உரசுகின்றன,*
***உன்னோடு உரையாடுதல்)***

*என்று தன் விழைவைக் காதலன் குறிப்பிடுகின்றான். அவனே இன்னொரு சூழலில்*

*நான்*
*எடுக்கும் போது தான்*
*நீ பேச வேண்டும்*

*நான் அழைக்கும் போது*
*சில வார்த்தைகள்*
*நீ விரும்பினால்*
*பொறுக்கிக் கொள் (பொறுக்கிக் கொள்,*
***பார்வையில் பூத்த நிலா)***

*என்று ஆணவமாகவும் பதில் அளிக்கின்றான்.*

*காதலின் தொடக்கத்தில் அவன் பேசிக்கொண்டே இருக்க அவள் அமைதியாகக் கேட்டுக் கொண்டே இருக்கிறாள். அவனது பேச்சை அவள் மிகவும் ரசிக்கிறாள். ஏனென்றால் 'அவன் மனசின் அடியாழம் தொட்டு உரையாடு'பவன்.*

*முன்பெல்லாம்*
*இருவரும்*
*உரையாடிக்கொண்டே*
*விரிந்த நெடுஞ்சாலையின்*
*பெருந்தொலைவை*
*நொடி நேரத்தில் கடந்ததாய்*
*உணர்ந்திருக்கிறேன் (முன்பெல்லாம் . . ,*
***உன்னோடு உரையாடுதல்)***

என்று அவன் கூறும் போது தொடக்கத்தில் உரையாடல் ஒரு இணைப்புப் பாலமாக இருந்ததனை அறிகிறோம்.

அன்றொரு நாள்
நண்பகலில்
குளிர்தண்டலை கருவூர்
நெடுஞ்சாலையின்
வலதுபுறம்
மருதாண்டான் வாய்க்கால் கரையோரம் பூவரச மர
நிழலில் அமர்ந்து
உன்னோடு உரையாடுதல்

பல ஆயிரம் காத தூரம் தொலைந்து
போனதைச் சொன்னேன் (பொய் மேகங்கள்,
**பார்வையில் பூத்த நிலா**)

என்ற வரிகள் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருப்பதை ஒருவருக்குள் ஒருவர் தொலைந்து போவதாக கவிஞர் உணர்த்துகின்றார்.

*Deep conversations with the right people are priceless*

என்ற கருத்து இங்கு நினைவு கூரத்தக்கது. இவ்வுரையாடல்களின் போது இருவரும் தத்தம் சுயத்தை இழந்து ஒருவருக்குள் ஒருவர் எனக் கருத்தொருமித்த காதலராகின்றனர்.

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
தன்னை மறந்தாள் தன் நாமம் கெட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலித்தாள் ஆச்சாரத்தை
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே
(திருஆரூர் திருத்தாண்டகம், 258)

*என்று ஞானசம்பந்தர் திருவாரூர் பதிகத்தில் காட்டியதைப் போல இவளும் முழுமையாக அவனுள் தன்னைத் தொலைத்துவிட்ட காலம் அது. ஆனால் இப்போது அந்நிலை மாறிவிட்டது. அவளிடம் பேச்சுக் குறைந்து வறட்சி தோன்றிவிட்டது.*

*உனக்கான இடைவெளி விட்டு*
*நீ*
*உரையாடலின்றி*
*வறட்சி காட்டுகிறாய்*

*பொய் மேகங்கள்*
*வேகமாக*
*கோவன் புத்தூர்த் திசையில் (பொய் மேகங்கள், **பார்வையில் பூத்த நிலா**)*

*என்ற வரிகள் காதலில் உரையாடல் விருப்பம் மாறிவரும் காலகட்டத்தையும் எடுத்துரைக்கின்றன.*

*சில வேளைகளில் அவள் இருவழி உரையாடலை விரும்பாமல் தன் பக்கத்திலிருந்து வெறும் கேள்விகளை மட்டும் எழுப்புகிறாள்.*

*உரையாடலை*
*நீ*
*மௌனத்தின் அருகில்*
*நின்று*
*கேள்விகளாக்கி*
*விடுகிறாய் (கை நழுவிப் போகிறது ..., **உன்னோடு உரையாடுதல்**)*

*என்று அவன் கலுழ்கிறான். திரும்பவும் அவளை நோக்கி*

*கேள்விகளின்*
*மத்தியில் நின்று*
*உம் மென்று*

*சொல்லுதல்*
*முடுக்கமா*

*காயமா*
*நிழலா (கை நழுவிப் போகிறது ..., **உன்னோடு உரையாடுதல்**)*

*என்று திகைத்துப் போகிறான்.*

*அவளோடு பேசுவதற்காக நிறைய சொற்களைத் தேக்கி வைத்துக்கொண்டு வீட்டுக்கு வந்தான். ஆனால் அவளோ அவனோடு பேசுவதில் ஆர்வம் காட்டவில்லை.*

*வீடு திரும்பிய நேரத்தில்*
*உனக்கான உரையாடலை*
*நிரப்பிக் கொண்டே வந்தேன்*

*எனக்கான சமாதானத்தை நீ*
*நிரப்பவில்லையெனினும்*
*நான் கடந்த தொலைவு*
*காட்டாற்று வெள்ளம்*
*காட்டுத்தீயின் வேகம் (அவரவர் ஏக்கங்களோடு...,* ***உன்னோடு உரையாடுதல்**)*

*என்று அவன் தான் ஆசையோடு பேச வந்து, ஏமாந்து போன ஏக்கத்தையும் பேசவந்த வேகத்தையும் தெரிவிக்கிறான்.*

*அவளோடு பேசிக்கொண்டே இருப்பது அவனுக்கு பெரு விருப்பமாக இருப்பதால் அவன் அவளுடனான உரையாடலைக் காதல் வேள்வியாகக் கருதுகின்றான்.*

*Nothing compared to a beautiful conversation with a beautiful mind,*

*என்ற ஆங்கில வாசகம் உரையாடலின் சிறப்பை உணர்த்துகிறது.*

*உன்னோடு உரையாடுதல்*
*பெருங் காதல் வேள்வி (பெருங் காதல் வேள்வி,* ***பார்வையில் பூத்த நிலா****)*

*என்ற வரிகள் உரையாடலில் காதலனுக்கு இருக்கும் விருப்பத்தையும் அதன் அதீத சிறப்பையும் எடுத்துரைக்கிறது. இந்த உரையாடல் ஒருவழிப் பாதையாக மாறும் போது,*

*இரவு என்பது*
*இயல்பின்றி*
*இருக்கலாம் (பகலில் எரியும் நிலா,* ***உன்னோடு உரையாடுதல்****)*

*என்ற கவிதை வரி இருவரில் ஒருவர் மட்டுமே பேசிக் கொண்டிருந்தால் இரவு என்பது கொடுமையாகி [இயல்பின்றி] விடும் என்கிறது.*

*ஒருவர் கேட்டு ஒருவர் பதில் அளிப்பது மட்டும் உரையாடல் அல்ல. உரையாடல் என்பதில் இருவருடைய கருத்துக்களும் அங்கே பரிமாறப் படவேண்டும் சிலவேளைகளில் காதலருக்கு இடையே உரையாடல் போக்கு குறைந்து உறவாடுவதன் அவசியம் தோன்றிவிடும். காரணம் சொற்களின் வீரியம் குறைந்து உணர்வுகளின் செயற்பாடு அதிகரித்துவிடும்.*

*உரையாடல் புலனத்தில்*
*தட்டையான சொற்கள்*
*மறைந்து*
*வேறோர் அலைவரிசையில்*
*மாயமான்கள் துள்ளிட*
*நேரமின்றிப்பொழுதிறங்க*

*கணநேர நெருக்கம்*
*காண்பதெப்போ (கண்மணிமிடைப் பவளம்,* ***காதல் மொழி****)*

*என்ற நிலை தோன்றும். மிகச் சில சொற்கள் கூட அப்போது தேவைப்படாது. ஏனெனில்,*

*மாயமானொன்று*
*ஓடுகிறது*

*கானல்வரி*
*காப்பியமாகிறது*

*கானல்நீர்*
*நெடும் பாதையில்*

*சில சொற்கள் வேண்டாம்*

*ஒற்றாடல் என்ற ஒரே சொல் போதும்*
*அதிகாரம் வேண்டாம்*

*உடைந்து நொறுங்கும்*
*ஒற்றை வானம் (கானல் வரிக் காப்பியம், காதல் மொழி)*

*உரையாடலின் போது பகிரப்படும் பல சொற்கள் தேவையற்றுப் போய், தேவை என்ற ஒரு சொல் மட்டுமே தேவைப்பட்டு நிற்க, வானமும் உடைந்து நொறுங்கி பூமியோடு இணைந்து விடும்.*

*ஓர் உரையாடல் சிலவேளைகளில் காதலர்க்கு இடையே வெறும் கேள்விகளாகவும் ஒற்றைச்சொல் பதில்களாகவும் சுருங்கிப் போய் விடுவதுண்டு.*

*உன்னோடு உரையாடுதல்*
*ஒரு வேள்வி என்றிருக்க*
*நீயேனடி*
*கேள்வியாய்ச் சிறுத்து*
*உறைகிறாய் (உரையாடுதல் ஒரு வேள்வி,*
***உன்னோடு உரையாடுதல்)***

*என்று அவன் கேள்வி கேட்டாலும் அவளது எதிர்வினை மௌனமே.*

*எந்த*
*பதிலுமிடாமல்*
*நீண்ட இடைவெளி*
*நிலவுக்கும்*
*கவிக்கும்*

*மௌனம்*
*உரையாடுவது*
*யாருக்கும் கேட்காது.*

*பிறைகள்*
*முழு நிலவாகும். (மௌனம் ஆதிமொழி,* ***காதல் மொழி****)*

*என்று காதலன் அடையும் மனநிறைவு அவளது மௌனத்தின் மொழி அவனுக்குப் புரிந்ததன் அடையாளமாகும். பிறையாக இன்று தோன்றுவது நிலவு விரைவில் முழு நிலவாகும் என்ற நம்பிக்கை இக்கவிதையில் தென்படுகிறது.*

*இதைத்தான்*

*In the silence of love*
*You will find the spark of life*

*என்றார் ரூமி.*

*காதலர்களின் மௌன பரிபாஷையைப் பிறரால் புரிந்துகொள்ள முடியவில்லை. பிறைகள், முழு நிலவாகும் என்ற ஆழமான நம்பிக்கைதான் காதலின் ஊற்று.*

*அவன் அவளைத் தொடர்பு கொண்டு பேச முயலும் போது அவள் அவனது அழைப்பை ஏற்பதில்லை. ஆனாலும் அவளுடைய மறு மொழிக்காக அவன்*

*காத்திருக்கிறான். காத்திருத்தல் ஒரு தவம் என்று அவன் நம்பிக் காத்திருக்கிறான், உரையாடுதல் ஒரு வேள்வி என்று நம்புகிறான்.*

*வேறு ஏதேனும்*
*தகவல் தொடர்பு முறையில்*
*மாற்றுப் பாதையில் செல்ல*
*உபாயங்கள் இருப்பின்*
*சொல்லித்தான் கொடேன். (சொல்லித்தான் கொடேன்,* ***பார்வையில் பூத்த நிலா****)*

*என்று அவளைக் கெஞ்சுகிறான்.*

*கையிலொரு*
*தொடுதிரை அலைபேசி கொண்டு*
*அழைக்காமலும்*
*பதிலிறுக்காமலும்*
*நீயேன்*
*வதை முகாம் நடத்துகிறாய் (மனசறியும் வித்தை,* ***உன்னோடு உரையாடுதல்****)*

*என்று அவளைக் கேட்கின்றான். அவளிடத்தில் இருந்து எந்தப் பதிலும் இல்லை.*

*சரி*
*உன் முடிவுக்கே*
*விட்டுவிடுகிறேன்*

*காயங்கள் போதும் (போதும்,* ***பார்வையில் பூத்த நிலா****)*

*என்று மனச்சோர்வு அடைகிறான்.*

*பேசுவதற்கு*
*பெரும் வேட்கையுடன்*
*வந்தேன்*
*அழைத்தேன்*

*நீயேன்*
*மகிழ்ச்சியைப்*
*பரிசளிக்க மறுக்கிறாய் (மகிழ்ச்சிப் பரிசு, **உன்னோடு உரையாடுதல்**)*

*என்று கேட்கிறான். அவள் தனது*

*அழைப்பை ஏற்கவியலாத*
*ஒவ்வொரு துளியூண்டு*
*வினாடியிலும் (சங்கிலிக் கண்ணிகள், **பார்வையில் பூத்த நிலா**)*

*அவனது தவிப்பு பன்மடங்காகிறது.*

*சொற்கள்*
*சுடு சோறுதான்*

*அதீதத்தின் பசியென்றாலும்*
*தொட்டால்*

*வெடுக்கென உதறும்*
*விரல்கள்*

*நீ ஏன்*
*சுட்டெரிக்கிறாய்*

*கத்தரி வெயிலுக்கும்*
*காலமுண்டு (சுடுசோறு, **காதல் மொழி**)*

*என்கிறான். கத்திரி வெயிலும் சில வாரங்கள் தானே. நீ காலம் முழுக்க என்னிடம் சுடுசோறு போல சூடான சொற்களைப் பேசுகிறாயே ஏன் என்று வினவுகிறான்.*

*சூடாத சொற்கள்*
*பாடாத கவிதையாய்ப்*
*படியட்டும்.*

*மனதின் இருள்*
*விலகிடும் கணத்தில்*
*கையருகே வானம்.* *(நித்திய மலர்,* ***காதல் மொழி****)*

*என்று அவள் பேசாத சொற்களும் அவனுக்குப் பாடாத கவிதையாகத் தோன்றுகிறது. ஆனால் விரைவில் அவள் தன் கைகளில் கிடைப்பாள் என்ற நம்பிக்கையும் கடைசி வரியில் தெளிவாகிறது.*

*The most beautiful words of love, are told in silence.*

*என்ற லியோனார்டோ டா வின்சியின் கருத்தை அவளது மௌனம் நினைவூட்டுகிறது.*

*அவள் பேசாத சூழல்*
*மௌனம்*

*இடைவெளி*
*பதிலிறுக்காத வேளை*

*கனியிருப்பக்*
*காயாகிறாள்* *(கனியிருப்பக் காயாகிறாள்,*
***உன்னோடு உரையாடுதல்****)*

*என்று கருதி இவள் ஏன் எப்போதும் இனிப்பான சொற்களைப் பேசக்கூடாது என்று தனக்குத் தானே கேட்டுக் கொள்கிறான். அவளுடைய மௌனம் அவனுக்கு சகிக்க இயலாத துன்பத்தைத் தருகிறது.*

*உனது சூழல்*
*மௌனம்.*
*எனதோ கதறல்*

*நிகழ்ந்தது எல்லாம்*
*நிசத்திலும் அது தான்* *(எங்கும் உன் ஆட்சி,*
***உன்னோடு உரையாடுதல்****)*

*என்று அவள் பேசாத தருணங்களில் கதறுகிறான்.*

*அவன் சொன்ன சொல், ஒரு சிறு சொல் அவளை அடியோடு மாற்றி விட்டது. அதனை அவள் நினைத்துப் பார்க்கிறாள்.*

*கண்ணா,*
*உனக்குத் தெரியாது*
*என்னவாய்*
*நானானேன்.*

*என்னவாயிற்று*
*உன் மௌனம்?*

*என்னவாக்கிற்று*
*உன் சின்னஞ்சிறு சொல்?*

*துரோணருக்குத் தெரியாது*
*ஏகலைவன் எடுத்துப் பிடித்த*
*கைப்பிடி மண் வடிவம்.. (கைப்பிடி மண் வடிவம்,* ***காதல் மொழி****)*

*என்று அவள் கூற்றில் அமைந்த இக்கவிதை அவனது ஒரு சின்னஞ்சிறு சொல் அவளுக்கு புதிய உணர்வையும் உறவையும் உருவத்தையும் கொடுத்ததை அவன் அறியவில்லை. காதலால் அவளுக்குள் ஏற்பட்ட மாற்றம் மௌனமாக வெளிப்படுகிறது.*

*உன் மௌனத்தை எடுத்தாலும்*
*என் மனதின் வலி*
*மௌனமல்ல (கண்மணிமிடைப் பவளம்,* ***காதல் மொழி****)*

*என்கிறான் அவன். அவளுடைய மௌனத்தை ஏற்றுக்கொள்ள முடியாதவன் அவள் நலத்தைப் புனைந்துரைக்கும்போது,*

*தேனான பெண்ணவள்*
*தெவிட்டாத சொல்லவள்  (தேனான பெண்,*
***உன்னோடு உரையாடுதல்)***

*என்கிறான். அவள் பேசப் பேச அவனுக்குத் தெவிட்டுவதே கிடையாது. அவளோடு பொழுதெல்லாம் பேசிக் கொண்டிருக்க வேண்டும் என்பதே அவனது விருப்பமாகும். அவளோடு பேசிவிட்டு திரும்பிய பிறகும்கூட அவளது நினைவு அவன் கூடவே பயணிக்கிறது,*

*விடைபெற்ற பின்பும்*
*விரலசைக்கும் எண்ணங்கள்*
*பிரியும் வேளையில் எல்லாம்*
*பிரியாத கண்ணீர்*

*திரும்பிப் பாராமல் நடப்பேன்*
*திசைக்கெதிரே*
*உன்*
*தீக்கொழுந்து முகம்  ( பூமர நிழல்)*

*என்ற கவிதை அவள் ஒரு திசையில் போய் விட்டாள். அவன் மறு பக்கமாகத் திரும்பி நடந்து வருகிறான். அவன் கண்ணெதிரே அவள் முகம் ஊசலாடுகிறது .அந்த முகத்தில் அவனோடு இருந்த உறவின் சுகமும் அவனைப் பிரிந்த துயரின் கனமும் புலப்படுகிறது. அதனால் அவளது முகம் தீக்கொழுந்து போல சிவந்து காணப்படுகிறது. பிறகு அவன் பேருந்தில் ஏறி விட்டான்.*

*பேருந்தின் வழி எங்கும்*
*பேச்சு கொடுக்கும்*
*ஞாபகங்கள்  (பூ மர நிழல்)*

*என்ற வரிகளில் இருவரும் பேசிப் பிரிந்த பின்பும் அவனுக்கு அவளுடன் பேசிக்கொண்டு வருவதாகவே தோன்றுகிறது. இது உரையாடலின் பின் விளைவாகும்.*

உரையாடல் என்பது இருவரும் முக முகமாக அமர்ந்தோ அல்லது அலைபேசியின் மூலமாகவோ கருத்துப்பரிமாற்றமோ காதல் பரிமாற்றமோ செய்வதாக மட்டுமே கொள்ளவியலாது. அவரவர் தனியாக தமது கற்பனையில் உரையாடிக் கொள்வதும் உண்டு. இது மௌனத்தில் நடைபெறும் கற்பனை உரையாடல்.

*Dream without fear,*
*Love without limits*

என்பது போல கற்பனைக்குத் தடை எதுவும் இல்லை. காதலிப்பதற்கு எல்லை எதுவும் இல்லை. சங்க காலக் காதல் நிலத்தினும் பெரிது, கடலினும் ஆழமானது, வானத்தை விட உயரமானது என்பதை அறிகிறோம். கற்பனையில் உரையாடுவதும் மறுமுறை சந்திக்கும்போது அந்தக் கற்பனை உரையாடல்களை இருவரும் தமக்குள் பரிமாறிக் கொள்வதும் இயல்பு.

உன்னோடு
பேசிக் கொண்டிருக்கிறேன்

ஜன்னலில் வழியும்
வெயிலின் தனலை
உள்வாங்கி (பூ மர நிழல்)

என்ற வரிகள் வெயிலின் தாக்கத்தைப் பொருட்படுத்தாமல் அவன் கற்பனையில் அவளோடு அளவளாவிக் கொண்டிருப்பதைக் காட்டுகின்றன. இத்தகைய உரையாடல் அவனுக்கு அவளைச் சந்தித்தது போன்ற மன நிறைவைத் தருகின்றது.

சந்திப்பில்லாவிடினும் சந்தித்தோம்
நீண்ட நாட்களுக்குப் பின்

என்று அடுத்து வரும் கவிதை வரிகள் அவன் கற்பனை உரையாடலில் பெற்ற மன நிறைவையும் மகிழ்ச்சியையும் காட்டுகின்றன.

*காதலர்க்கு இடையே நடைபெறும் உரையாடலில் பெண் தனக்கு தொடர்பு இல்லாதவர் போல நடந்து கொள்வதும் பேசுவதும் இன்று நேற்று வந்ததல்ல. திருவள்ளுவர் காலத்திலிருந்தே இந்நிலை இருந்துள்ளது.*

*உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்*
*ஒல்லை உணரப் படும். (1096)*

*என்ற குறள் அவள் தனக்கு உறவு இல்லாதவர் போல பேசுகிறாள். ஆனால் அவள் பகை இல்லாதவரிடம் தான் பேசுகின்றாள் என்பதை அவனால் மட்டுமே உணர முடியும். அவளுக்குத் தன்னிடம் கோபம் இல்லை, சுற்றுச் சூழ்நிலை தன்னிடம் இணக்கமாகப் பேசக்கூடியதாக இல்லை என்பதை அவன் புரிந்து கொள்கிறான்.*

*கண்ணோடு கண்இணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்*
*என்ன பயனும் இல (1100)*

*என்பதால் காதலருக்கு இடையே நடக்கும் கண்களின் கருத்துப் பரிமாற்றமே காதலில் முக்கியப் பங்குவகிக்கின்றது. இங்குச் சொற்களை விட மௌனத்துக்குக் கூடுதல் பரிமாற்றத் திறன் உண்டு. ஒருவரின் மௌனத்துக்குக் காரணம் அடுத்தவரிடம் பேச மறுப்பதோ விருப்பமின்மையோ அல்ல. ஏனெனில் இன்னொரு கவிதையில்*

*எந்தப்*
*பதிலுமிடாமல்*
*நீண்ட இடைவெளி*
*நிலவுக்கும்*
*கவிக்கும்*
*மௌனம்*
*உரையாடுவது*
*யாருக்கும் கேட்காது (மௌனம் ஆதிமொழி, **காதல்மொழி**)*

*என்கிறார் கவிஞர்.*

*There is a place born in silence*
*A place where the whispers*
*Of the heart arise*

*There is a place where the*
*Voices sing your beauty*
*A place where every breath*
*Carves your image in my soul*

என்ற ரூமியின் கருத்து இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

மௌனம் வேறு
மறுத்தல் வேறு (வாழ்வா? வரமா?, **காதல் மொழி**)

என்று கூறும் அவன் மௌனத்திற்குப் புதிய விளக்கம் அளிக்கின்றான்,

மௌனம்
ஆதிமொழி

ஊடல்
தொப்புள் கொடி

இரவு
தலையணை

நீ இன்னும்
எழவில்லை . . . . . . .

மௌனம்
மௌனமேயல்ல
மறுமொழி தான் (மௌனம் ஆதிமொழி, **காதல் மொழி**)

என்று தன்னுடைய மௌனத்தை மறுமொழியாக்கும் இவன் அவளுடைய மவுனத்தை ஏற்றுக்கொள்ள இயலாமல் தவிக்கிறான்.

*Listen to silence. It has do much to say*

என்கின்ற ரூமியின் கருத்தை அவன் அவளுக்கு இக்கவிதையில் நினைவூட்டு கின்றான். ரூமி ஆன்மிகக் கவிஞர். ஆன்மிகம் என்பது பேரின்பம் சார்ந்தது காதல் என்பது சிற்றின்பம் சார்ந்தது என்றாலும் இரண்டுமே பரவச நிலைகளை குறிக்கோளாகக் கொண்டது என்பதில் ஐயமில்லை.

முத்தமிழ்விரும்பியின் கவிதையில் வரும் காதலர்கள் தமது உரையாடலை நினைத்து பார்ப்பதைக் காணலாம். சில சொற்கள் பேசுவதும் ஒற்றைச் சொல்லில் பதிலளிப்பதும் பார்க்கலாம். சில சமயத்தில் முழு மௌனம் சாதிப்பதையும் அவதானிக்கலாம். எந்த முறையைப் பின்பற்றினாலும் அவர்களுக்கும் கருத்துப் பரிமாற்றமும் காதல் பரிமாற்றமும் நிகழ்ந்துகொண்டு தான் இருக்கின்றன. கற்பனையிலும் பேசி மகிழ்கின்றனர். இதனால் வாசகருக்கு உரையாடல் மூலமாக அவர்களின் மகிழ்ச்சியும் சோகமும் தாபமும் உணர்த்தப்படுகிறது.



கண்ணுக்கொரு வண்ணப் புறா
காதுக்கவள் கானக்குயில்
பெண்ணுக்கரசானவளை
வந்தால் வரச்சொல் – எனக்கே
பேச்சுப்படி ஆசை முத்தம்
தந்தால் தரச்சொல்!

- பாரதிதாசன்



# பழந்தமிழ் இலக்கிய மாண்பு

*முத்தமிழ் விரும்பியின் கவிதைகள் முன்னும் பின்னும் இணைக்கும் அரிமா நோக்குடைய இயல்பின. கவிதைகளில் சங்க இலக்கியக் கருத்துக்கள் காப்பியக் கருத்துகள் புராண இதிகாசக் கதாபாத்திரங்கள் போன்றவற்றைக் காணலாம். அகத்திணை புறத்திணைக் கருத்துக்களும் ஆங்காங்கே விரவிக் கிடக்கின்றன. நகரமயமாக்கல், நதிக்கரை நாகரிகம், காடு மலைகளை அழித்து விடுமுறை தலங்களை உருவாக்குதல், நெகிழி பயன்பாடு, பெரு வழிச் சாலை விபரீதங்கள், விபத்துகள், நட்சத்திர விடுதியில், நாகரிகப் போலித்தனம் போன்றவற்றையும் காணலாம். இதனால் இவரது கவிதைகள் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகத்தின் நிலையையும் இன்றைய தமிழகத்தின் நிலையையும் இணைத்துக் காட்டுகின்ற பண்பாட்டுப் பாலங்களாக விளங்குகின்றன.*

## பழந்தமிழ் இலக்கிய ஆர்வம்

*கவிஞர் முத்தமிழ் விரும்பி சங்க இலக்கியம் காப்பியம் தற்கால இலக்கியம் என்று கல்லூரியில் தமிழ் இலக்கியம் கற்றவரல்ல. அவ்வாறு கற்றிருந்தால் கற்றதை தனது கவிதையில் புகுத்தி இருப்பார் எனக் கொள்ளலாம். அவர் முறையாக தமிழ் இலக்கணம் இலக்கியம் பயின்றவர் அல்ல என்றாலும் தன் சொந்த*

முயற்சியாலும் ஆர்வத்தாலும் சிறப்பாகப் பயின்று தேர்ச்சி பெற்று சித்தர் இலக்கியம், சிற்றிலக்கியம் என்று வெவ்வேறு பிரிவுகளில் இலக்கியப் பேருரை நிகழ்த்துகின்ற இலக்கிய ஆர்வலர் அவர் .

**சங்க இலக்கிய மாந்தர்**

முத்தமிழ் விரும்பி தனது காதல் கவிதைகளில் அகத்திணை மாண்பினைப் போற்றுகின்றார். அகத்திணைக் கூறுகளையும் சங்க இலக்கிய மாந்தர்களையும் தன்னுடைய கவிதைகளில் சிறப்பாகப் பயன்படுத்துகின்றார்.

இவளை எப்படித்தான்

தோழியும் இல்லை
தேர்ப் பாகனும் அப்படியே

தோழனும் இல்லை
பாங்கனும்
ம்ஹும்
என் அழைப்புகளை
நிராகரிக்கும்
இவளை எப்படித்தான் (இவளை எப்படித்தான்..,
**உன்னோடு உரையாடுதல்)**

என்ற கவிதை வரிகள் சங்க காலத்தில் தலைவிக்குத் தோழியும் தலைவனுக்குப் பாங்கனும் உதவினர். ஆனால் இன்று அலைபேசி அவர்களின் பணியைச் செவ்வனே புரிகின்றது. ஆனால் இவளோ அலைபேசி அழைப்புகளை ஏற்பதில்லை வேறு எவருடைய உதவியையும் நாடவில்லை. சங்க இலக்கியத்தில் இருப்பதுபோல இத் தலைவிக்கு தோழியும் இல்லை தலைவனுக்குத் தோழனாக வரும் பாங்கனும் கிடையாது. இந்நிலையில் அவளோடு எப்படித்

*தொடர்பு கொள்வது என்ற காதலனின் மன ஏக்கத்தைச் சங்க இலக்கிய மாந்தர்களைத் தொடர்புபடுத்திப் பிரதிபலிக்கிறார்.*

*கவிஞர் இன்னொரு கவிதையில் சங்க இலக்கிய மாந்தர்களான தலைவன் தலைவி என்ற பெயர்களை எடுத்தாள்கிறார்.*

*தலைவனோடு*
*உரையாடாத தலைவி*
*வேறு யாரோடு*
*கேலி பேசுவாள்*

*யார்தான்*
*பகடியாட முடியும்? (யார்தான் பகடியாட முடியும்?,*
***உன்னோடு உரையாடுதல்)***

*என்ற கவிதை வரிகளில் அவனுக்கும் அவளுக்கும் சங்க இலக்கிய கதை மாந்தர் தகுதியை வழங்குகிறார். இங்குக் காதலியோடு பேச வாய்ப்பில்லாத காதலனின் ஏக்கங்கள் கேள்விக்குறி ஆகின்றது.*

## குறுந்தொகை குருகு போல ஒரு கூகை

*முத்தமிழ் விரும்பியின் நாட்டுப்புறச் சாயல் உள்ள கவிதை ஒன்றில் ஓர் காதலி இரவில் யாரும் இல்லாத வேளையில் தன்னுடன் கலந்துறவாடத் துடிக்கும் தன் காதலனிடம் 'யாரும் இங்கு இல்லை என்று நினைக்காதே மரத்தில் கூகை ஒன்று இருக்கிறது' என்று எச்சரிக்கிறாள். பிறிதொரு நாள் இவன் இவளது காதலை ஏற்க மறுத்து விட்டான் என்றால் இந்தக் கூகை வந்து சாட்சி சொல்லப் போவதில்லையே என்று அவள் அஞ்சியிருக்கலாம். அவளது அச்சத்துக்கு காரணம் முற்காலத்தில் இவ்வாறு பெண்கள்*

ஏமாற்றப்பட்டதற்கான நிகழ்வுகளை சமூகத்திலும் இலக்கியத்திலும் அவள் ஏராளமாகக் கண்டிருக்கலாம்.

அக்கம் பக்கம்

கூகை ஒண்ணு

கொண்டை கலஞ்சா

அம்மா கேட்பா... (சத்தம் போடாம முத்தம் ஒண்ணு, **தேனடையும் வரலாறு**)

என்று அப்பெண் தன்னுடைய அச்சத்தை வெளிப்படுத்துகிறாள். அவனோ என்னை தனியாகச் சந்திக்க வந்த பிறகு

சும்மா இருந்து
என்ன பண்ண

தூக்கம் வருமா
ராவுக்குள்ள (சத்தம் போடாம முத்தம் ஒண்ணு, **தேனடையும் வரலாறு**)

என்று அவளிடம் கேட்கிறான். தனக்கு இனி தூக்கம் வராது அவளைப் பற்றிய ஏக்கம் தூக்கத்தைக் கெடுத்துவிடும் என்று கூறுகின்றான்.

குறுந்தொகையில் ஒருவன் இவ்வாறு பழகிப் பிரிந்து 'அவளை அறியேன்' என்று கூறியதும் அவள் அவனோடு இருந்த வேளையில் அங்கு ஒரு குருகு மட்டுமே இருந்தது என்கிறாள். வேறு யாரும் தங்களின் உறவுக்கு சாட்சி சொல்ல இல்லையே என ஏங்குகிறாள்.

யாரு மில்லை தானே கள்வன்
தானது பொய்ப்பின் யான்எவன் செய்கோ

*திணைத் தாளன்ன சிறுபசுங் கால*
*ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்*
*குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே (குறுந்தொகை 25)*

*என்று தனது இயலாமையை தலைவி எடுத்துக்கூறி வருந்துவதாக குறுந்தொகைப் பாடல் காட்டுகிறது. அதுபோல் நடந்துவிடுமோ என்ற அச்சத்தில் முத்தமிழ் விரும்பியின் கவிதையிலும் அவள் அவனோடு கூடி மகிழ அஞ்சுகிறாள்.*

### களவுக் காதலுக்கு சாட்சிகள் இரண்டு

*திருவிளையாடல் புராணத்தில் காதலன் இவளை அறியேன் என்று கூறும் அவல நிலை ஒரு பெண்ணுக்கு ஏற்பட்ட போது அவள் மதுரை சொக்கநாதரை வணங்கி நீதிமன்றத்தில் போய் நின்றாள். அவர்கள் கூடி மகிழந்திருந்த இடத்தில் அவர்களுக்கு நிழல் தந்த மரமும் அருகில் இருந்த கிணறும் அங்கு வந்து அந்நிகழ்வு நடந்ததற்கு சாட்சி பகர்ந்தன என்று ஒரு கதை காணப்படுகிறது. மீனாட்சி அம்மன் கோயிலின் வட கிழக்கு மூலையில் உள்ள பைரவருக்கு எதிரே அந்தக் கிணறும் மரமும் இன்றும் காணப்படுகிறது.*

### ஜெர்மனியில் காதலியும் பறவையும்

*ஜெர்மன் மொழியிலும் காதலர்களுக்குள் நடந்த கலவியை ஒரு பறவை மட்டும் பார்த்துக்கொண்டிருந்தது என்ற கருத்துடைய ஒரு பாடல் கிடைக்கிறது. அப்பாடலில் யாருமில்லை என்று தானே நினைத்தேன் அங்கு ஒரு பறவை நடந்ததை எல்லாம் பார்த்திருக்கிறதே. வேறு யாராவது பார்த்திருந்தால் எனக்குப் பெரிய அவமானம் வந்திருக்குமே என்று கவலைப்படுவதாக இக்கவிதை அமைந்துள்ளது. இக்கவிதையை ஜெர்மனியில் வால்தர் ஃவான் தெ ஃவோகல்வைதே என்பவர் எழுத ஆங்கிலத்தில் தாமஸ்*

லோவெல் பெடோஸ் என்பவர் மொழிபெயர்த்தார். அக்கவிதையின் கடைசி பகுதி வருமாறு,

*In the love passage if anyone had been there*
*How sad and shame should I be*
*But what were we doing alone*
*Among the green there*
*No soul shall ever know except my love and me*
*And the little nightingale, Tandaradei*
*She, I think, will tell no tale*

இக்கவிதையில் அப்பெண் இந்த நைட்டிங்கேல் பறவை போய் யாரிடமும் தங்களின் களவுக் காதலைப் பறை சாற்றிவிடாதல்லவா என்று கருதுகிறாள்.

சங்க இலக்கியத்தில் குருகு எனப்படும் பறவை ஒழுகு நீரில் ஓடி வரும் சிறிய ஆரல் மீன்களை உண்பதற்காக அவற்றைப் பார்த்துக்கொண்டிருந்தது. இவர்களைப் பார்க்கவில்லை என்ற குறிப்பு தொனிக்கிறது. ஜெர்மன் கவிதையில் நைட்டிங்கேல் பறவை பார்த்திருந்தாலும் அது போய் யாரிடமும் இந்நிகழ்வைச் சொல்லாது [அலர் தூற்றாது] எனக் கருதும் பெண்ணின் துணிவு புலப்படுகிறது. முத்தமிழ் விரும்பியின் கவிதையில் கூகை பார்க்கிறதே, ஆளரவம் கேட்டால் அஞ்சி குரல் கொடுக்குமே என இளம்பெண்ணின் ஐயம் வெளிப்படுகிறது.

## முத்தமிழ்விரும்பி கவிதைக்காதலியின் உயர்பண்பு

களவுக் காதல் என்பது வீட்டுக்கு வெளியே ஒரு பொதுவெளியில் பகல்வேளையில் நடந்திருக்கிறது. அப்போது அங்கு ஒரு பறவை இருந்தது என்பது ஓர் இயற்கை நிகழ்வு. இதனை ஒவ்வொரு கவிஞரும் ஒவ்வொரு காலகட்டத்திலும் நாட்டிலும் மொழியிலும் அவரவர் மனவோட்டத்துக்கு ஏற்ப கவிதை

ஆக்குகின்றனர். முத்தமிழ் விரும்பியின் இக்கவிதை பண்பாட்டுச் சிறப்பும் கற்பனை வளமும் கவித்திறனும் நிறைந்ததாக விளங்குகிறது.

மற்ற இரண்டு கவிஞர்களும் களவுக் கூட்டம் முடிந்த பின்பு பெண்களின் கலக்கத்தைப் பாடுபொருளாக்கியுள்ளது. ஆனால் முத்தமிழ் விரும்பியின் கவிதை நாயகி அவனுக்கு நிச்சயிக்கப்பட்ட மணப்பெண் என்றாலும் அந்நிகழ்வு நடைபெறா வண்ணம் கூகையைக் காட்டி அவனை எச்சரித்துத் தடுத்து விடுகிறாள். கடைசியில் நாம் போவோம் தனி வழி என்று சொல்லி அவளை அழைத்துக்கொண்டு அவ்விடத்தை விட்டு அகன்று விடுவதாக கவிதை நிறைவு பெறுகிறது.

## அகத்திணை அழகு

அகநானுற்றின் ஒரு பகுதியான மணிமிடைப்பவளத்தை கண்மணியோடு இணைத்து அகநானுற்றின் ஒரு பகுதியான மணிமிடைப் பவளத்தொடு பொருத்தி 'கண்மணிமிடைப்பவளம்' என கவிஞர் சேர்த்திருப்பது அவரது கவித்திறனுக்கும் கற்பனை நயத்துக்கும் நற்சான்றாகும்.

அகநானூறிருக்க
கண்மணிமிடைப்பவளமென
உன் மௌனத்தை எடுத்தாளும்
என் மனதின் வலி
மௌனமல்ல (கண்மணிமிடைப் பவளம், **காதல் மொழி**)

என்ற வரிகளில் வரும் மணியும் பவளமும் கலந்த உன் மௌனம் என்பது அவளது மௌனத்தில் பேச்சும் உண்டு மவுனமும் உண்டு. இரண்டும் கலந்த இந்த தொடர்பியல் உத்தியை அவள் பயன்படுத்துகிறாள். அவள் சொல்லாமல் சொல்லும் அந்த தகவல் அவன் மனதுக்குச் சொல்லொணாத் துயரத்தைக் கொடுக்கிறது.

அந்த வேதனையை மௌனமாக சகித்துக்கொள்ள அவனால் இயலாது. எனவே கவிதையின் மூலமாக அவன் வெளிப்படுத்தக் கருதுகிறான்.

இடையில் வந்த கனவுள்
இடைவெளி துளிர்க்கத்
துடித்தெழுந்தேன்.
கால நகர்வில்
கவிதையெழுதலாம் (கண்மணிமிடைப் பவளம்,
**காதல் மொழி**)

என்று கூறும் அவன் அடுத்து ‘இது பொருள் வயின் பிரிவு’ என்று சொல்லி தனக்குத் தானே சமாதானம் செய்து கொள்கிறான். நவீன கவிதையில் பொருள் வயின் பிரிவு என்ற சங்க இலக்கியக் கருத்தாக்கத்தை கவிஞர் புகுத்துகிறார். இவரது கவிதையை போகிற போக்கில் வாசித்து விட்டுப் போக இயலாது. பார்வை நூல்களின் துணையோடு ஒவ்வொரு திணைக்கும் பொருள் யாது இதனை இங்கு இவ்வாறு பயன்படுத்தியதன் நோக்கம் யாது என்று ஆங்காங்கே நிறுத்தி நிறுத்தி படித்துத் தெரிந்துகொண்ட பிறகே முழுக் கவிதையின் பொருளையும் உணர முடியும்.

## அகத்திணையில் புறத்திணை

காதல் பாடல்களிலும் சங்க இலக்கியப் புறத்திணைக் கூறுகளை உள்ளடக்கி கவிதை வரைந்தவர் முத்தமிழ் விரும்பி. காதலிக்காக காத்திருந்தவன் அவளைக் காண இயலாமல் திரும்பும் பொது தனக்கு காதலிலும் வெற்றியில்லை என்பதை வேதனையோடு வெளிப்படுத்துவதாக அமைந்த கவிதையில் புறத்திணைக் கூறுகளை உள்ளடக்கி வரைந்துள்ளார்.

யார் மீதும்
புகாரில்லை
கண்ணம்மா

*ஆனால்*
*என் மீது*
*புகார்களுண்டு*
*என் மீது*
*வருத்தங்களுண்டு*

*நான் ஒன்றும் கனவுகளுடன்*
*வாழ்பவனில்லை.*

*தோற்றவனில்லை*

*ஆனாலும்*
*வென்றவனில்லை.*

*கரந்தை வெட்சி*
*வாகைப் பூக்களைச்*
*சூடும்*
*நிலையிலுமில்லை. (ஓர் இதழையாகிலும்,*
***உன்னோடு உரையாடுதல்)***

*என்ற கவிதையில் அவளைக் காணதது அவனுக்கு வருத்தம் தான். ஆனாலும் அவன் நம்பிக்கை இழக்கவில்லை. மீண்டும் வந்து பார்க்க முயல்வான். அவன் கனவுகளில் கரைந்து போகிறவன் கிடையாது. நிஜத்தில் சாதிக்கிறவன். எனவே தோற்றதாகக் கருதவில்லை. இப்போதைக்கு வென்றவனும் இல்லை. போருக்குரிய வெட்சி [ஆநிரை கவர்தல்]. கரந்தை [ஆநிரை மீட்டல்] என சூடி போரிட்டு வாகை சுட்டி வெற்றியைக் கொண்டாடும் நிலையிலும் அவன் இல்லை. ஆனால் கஜினியைப் போல ராபர்ட் ஃபிராஸ்ட்டைப் போல மீண்டும் மீண்டும் தொடர் முயற்சிகளை மேற்கொண்டு அவன் காதலில் வெற்றி பெறுவது உறுதி என்ற தன்னம்பிக்கையோடும் தளரா முயற்சியோடும் வாழ்கிறவன்.*

முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் எதிர்மறையான சிந்தனைக்கே இடமில்லை. ஆக்கப்பூர்வமான சிந்தனையும் முயற்சியின் வெற்றியும் அவர் கவிதைகளில் ஏராளமாகக் காணலாம். காதல் போராட்டத்தைக் குறிக்க புறத்திணைத் துறைகளை இக்கவிதையில் புகுத்தியுள்ளார். இதனால் இக்கவிதை பற்றி குறிப்பிட்ட முனைவர் தே ஞானசேகரன் ‘முத்தமிழ் விரும்பியின் கவிதைகளை ஒரே மூச்சில் படித்தால் எவருக்கும் பொருள் விளங்காது. சங்கச் செய்யுளைப் படிப்பது போல திரும்பத் திரும்பப் படித்தால் அது படிக்க படிக்க எல்லையில்லா வானம் போல பொருள் விரியும் கவிதைப் பாங்குடையது’ எனப் பாராட்டினார்.

### காப்பியக் கதை மாந்தர்

முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் சங்க இலக்கிய மாந்தர் போலவே காப்பியக் கதை மாந்தர்களும் முக்கியத்துவம் பெறுகின்றனர். சிலம்பின் கானல் வரி பல கவிதைகளில் இடம் பெற்றுள்ளது. இது தவிர கண்ணகி, மாதவி, மணிமேகலை, கோவலன் ஆகியோரும் இடம் பெற்றுள்ளனர். இவை தவிர புகார் காண்டம், முத்து பரல் போன்றவையும் கவிதையில் இடம் பிடித்துள்ளது.

மாதவிக்கே கானல் வரி

கண்ணகிக்கோ
கண்ணீர் வரி

கோவலன் யாரும்
பொற்கொல்லன் வீதியில் (யார்தான் பகடியாட
முடியும்?, **உன்னோடு உரையாடுதல்**)

என்ற கவிதை கானல் வரியால் மாதவி பிரிந்தாள்; கண்ணகி கண்களில் கருவரி படர கண்ணீர் விட்டாள்.

*கோவலன் ஒற்றைச் சிலம்பி விற்க பொற்கொல்லன் வீதிக்கு வந்தான் என்ற சிலப்பதிகாரக் கதை நிகழ்ச்சிகள் இடம்பெற்றுள்ளன. அடுத்தது தன் காதலி தன் தனிமையைப் போக்குபவள் ஆனால் இப்போதோ காலம் கடத்தி தன்னைத் தவிக்க விடுகிறாள் என எங்கும் காதலனின் வார்த்தையாக சிலப்பதிகாரத் தகவல்கள் பல இடம்பெற்றுள்ளன.*

*தனிமை*
*தீர்ப்பவள் தான்*

*தனிமை*
*கடத்துகிறாள்*

*எங்கோ இவன் வரிகள்*
*குடாக் கடலில்*
*புகார் காண்டம்*

*தீராது*
*ஆறாது*
*சிலம்பு காலக்*
*கானல் வரி*

*பரல் முத்து*
*பெருவழிப் பயணி*
*விரும்பி நிற்கிறான்*
*காலாதி காலமாக (கிளிப்பாடல் தனி ரகம்?,*
**உன்னோடு உரையாடுதல்)**

*என்ற கவிதை வரிகளில் நீண்ட வழிப் போகத் திட்டமிட்ட ஒருவன் தன் தனிமை தீர்க்காத பெண் துணையை நினைத்துக் கலங்குகிறான். ஆயினும் இவன் போக வேண்டிய பயணம் நீண்டது என்பதால் [Miles to go*

*before I sleep* என்பது போல அவனது பயணம்] சிலம்பு காலத்துக் கானல் வரியை விரும்பி நிற்கிறான்.

அடுத்து இன்னொரு கவிதையிலும் கானல் வரி முக்கியத்துவத்தை பெறுவதைக் காணலாம்.

மாயமானொன்று
ஓடுகிறது

கானல்வரி
காப்பியமாகிறது

கானல்நீர்
நெடும் பாதையில்

சில சொற்கள் வேண்டாம்

ஒற்றாடல் என்ற ஒரே சொல் போதும்
அதிகாரம் வேண்டாம்

உடைந்து நொறுங்கும்
ஒற்றை வானம் (கானல் வரிக் காப்பியம், **காதல் மொழி**)

என்ற இக்கவிதை வரிகளில் கானல் வரியின் பொருண்மையும் தகுதியும் கவிஞரால் உயர்த்தப்படுகிறது. கானல் வரி வெறும் கவிதையாக இல்லாமல் நீண்டதோர் காப்பியம் ஆகிறது. கானல் நீர் யார் அருகில் சென்றதும் மறைந்துவிடுவது இயற்கை. ஆனால் இங்கு அது நெடும் பாதையில் பயணிக்கிறது. முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் நிரந்தரமற்றவை என்று கருதப்பட்டவை நீண்ட எதிர்காலம் உடையனவாக தகுதி உயர்வு பெறுகின்றன.

***புராண இதிகாச மாந்தர்கள்***

*முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் சீதை, இராமன், இராவணன், அர்ச்சுனன், துரியோதணன், பீமன் போன்ற புராண இதிகாசக் கதை மாந்தர்கள் இடம் பெறவில்லை. மாறாக துரோணர், இராட்சசி, மாயாவி, ஏகலைவன் போன்றோர் இடம்பெறுகின்றனர்.*

*காதலனைச் சந்தித்த பின்பு ஒரு பெண் அடைந்த மாற்றங்களை அவள் அவனிடமே சொல்லும் ஒரு கவிதையில் ஏகலைவன் துரோணரிடமிருந்து வில் வித்தையை அவரறியாமல் கற்றுக்கொண்டான். அவருடைய உருவத்தை மண்ணில் பிடித்து வைத்து அதையே குருவாகக் கருதிப் போற்றிக் கற்றுக்கொண்டான் என்பது புராணக் கதை. இதை உவமையாகக் காதலி குறிப்பிடுகிறாள்.*

*கண்ணா*
*உனக்குத் தெரியாது*

*என்னவாய்*
*நானானேன்*

*என்னவாயிற்று*
*உன் மௌனம்*

*என்னவாக்கிற்று*
*உன் சின்னஞ்சிறு சொல்*

*துரோணருக்குத் தெரியாது*

*ஏகலைவன்*
*எடுத்து பிடித்த*
*கைப்பிடி மண்ணின் வடிவம். (கைப்பிடி மண்*
*வடிவம்,* ***காதல் மொழி****)*

என்ற கவிதையில் அவளுக்குள் காதலை உருவாக்கிய காதலனுக்குத் துரோணர் உவமையாகவும், அவள் பூஜித்த மண் வடிவம் அவள் மனதில் நிறைந்திருக்கும் காதலாகவும் துரோணரை வணங்கும் ஏகலைவன் அவளுக்கு உவமையாகவும் கவிஞர் எடுத்தாண்டுள்ளார். ஆனால் உவமை என்பது நுட்பமாக உணரப்பட வேண்டியதாக வாசகரின் அறிவார்ந்த பங்கேற்பைக் கோருவதாக அமைகிறது.

***ராட்சசி – ரட்சகி***

காதல் தோன்றும்போது அது மனிதரைப் பாடாய்ப் படுத்துகிறது. ஊணுறக்கம் இன்றித் தவிக்கின்றனர். அன்றாடப் பணிகளைச் செய்ய முடியாமல் திகைக்கின்றனர். பலரை மெலியச் செய்கிறது. பண்டைய இலக்கியங்கள் பெண்ணின் தோலில் பசலை என்னும் வெளிறிய நிறம் தோன்றுவதாககவும் குறிப்பிடுகின்றன. உடல் மெலிவதால் கை வளையும் மேகலையும் கழன்று விழுவதாகவும் காட்சிகள் இடம்பெற்றுள்ளன. ஆனால் இவை அனைத்தும் பெண்ணுக்குத் தானே தவிர ஆணுக்கு காதலினால் ஏற்படும் உடலியல் உளவியல் மாற்றங்கள் காட்டப்படவில்லை. அவனுடைய ஒரே ஏக்கம் அவளை மீண்டும் சந்திப்பது அவளுடன் கூடி மகிழ்ந்திருக்க வழிவகைகளை ஆராய்வதாக மட்டுமே அமைகிறது.

முத்தமிழ் விரும்பியின் கவிதை காதலினால் ஒரு ஆண் படும் வேதனையைக் காட்டி இவ்வேதனைக்குக் காரணமானவள் பற்றிய ஐயங்களை எழுப்பிக் கடைசியில் தெளிவு பெறவும் வைக்கிறது.

சமயா சமயத்தில்
நினைவலைகள்
துள்ளி எழுந்து
நனைக்கிறது குளிர்.

*இவள்*
*ராட்சசியா?*
*இல்லை.*
*ரட்சகி தான்*
*என்கிறது*

*நள்ளிருள் விழிப்பு.* *(ராட்சசியா?,* ***காதல் மொழி****)*

*அவன் தன்னை நினைவலைகளால் புரட்டிப் போட்டுத் தூங்க விடாமல் துன்புறுத்துவதால் அவள் ராட்சசியோ என்ற ஐயம் ஏற்பட்டுப் பின் தன்னை இரட்சிக்க வந்த நாயகி எனத் தெளிவு பெறுகிறான். இக்கவிதையில் துன்புறுத்துவோள். காப்பவள் என்ற இரு பெரும் இயல்புகள் புராணப் பாத்திரங்களின் வடிவில் உவமையாகக் எடுத்தாளப்படுகின்றன.*

***நிறைவு***

*சங்க இலக்கியம் சிலப்பதிகாரம் மற்றும் புராண இதிகாசக் கதை மாந்தர்களும் கருத்தியல்களும் முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் அழகாக இடம்பிடித்துள்ளன. இவற்றில் கசப்போ வெறுப்போ காட்டாமல் இனிமையும் மென்மையும் நிறைந்த வகையில் கவிஞர் பயன்படுத்தி இருப்பது வாசித்து இன்புறத்தக்கது.*



## ***பல்சுவைப் பாடுபொருள்***

*முத்தமிழ் விரும்பி காதலை விதவிதமாகப் பாடுகிறார். காதல் என்ற ஒரே கருப்பொருளைக் கொண்டு அதன் வண்ணங்களையும் வடிவங்களையும் பல்வேறு வகையில் சொல்லோவியங்களாகத் தீட்டுகிறார். ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகைப் பாடுபொருள் அல்லது நுவல்பொருளுடன் விளங்குகிறது. காதல் என்பது அடிக்கருத்து [theme] ஆகும். இப்பல்வகை பாடுபொருளும் முனைப்பு கருத்துக்கள் [motifs] ஆகும். முத்தமிழ் விரும்பி தனது கவிதைகளில் காதலைப் பாடு பொருளாக்கும் போது காட்டும் நனி நாகரிகம் குறிப்பிடத்தக்கது. காதலில் ஏக்கம், காத்திருத்தல், சந்திப்பு, நலம் பாராட்டல், மெய்யறிவு, நினைவுகள் எனப் பலப் பாடுபொருள்கள் காதல் உணர்ச்சிக்குச் சுவை சேர்க்கின்றன என்றாலும் காதலியே தனது கவிதையின் பாடுபொருள் என்கிறார். அவள் பெயரில் காவியம் ஒன்று தோன்றும் என்கிறார். அவள் சூடாத சொற்கள் பாடாத கவிதையாகப் படியும் என்கிறார்.*

*பசலைக் கொடி படர்ந்திருக்கும்*
*கருவேலியெனப்*
*பாசப்பொருளானாய் என்*
*பாடு பொருளானாய் (பாசப்பொருள்,* ***காதல் மொழி****)*

*என்ற வரிகள் காதலியே பாசப் பொருளும் பாடு பொருளுமாக விளங்குகிறாள் என்பதைச் சுட்டுகின்றன.*

*கவி மூலம் சுரக்கும்நேரம்*
*காவியமொன்று*
*உன் பெயர்*
*சூட்டிக்காட்டும் (காவியமொன்று உன் பெயரில்,*
***தேனடையும் வரலாறு****)*

*என்ற வரிகளில் காதலியின் பெயரால் காவியம் ஒன்று உருவாகும் என்பது முன்னறிவிக்கப்படுகிறது.*

*சூடாத சொற்கள்*
*பாடாத கவிதையாய்ப்*
*படியட்டும்*

*மனதின் இருள்*
*விலகிடும் கணத்தில்*
*கையருகே வானம் (நித்திய மலர்,* ***காதல் மொழி****)*

*என்ற வரிகளில் சூழலின் இருள் விலகிவிட்டால் அவள் அவனது கையில் கிடைத்துவிடுவாள். அவளுக்கு அவன் இதுவரை சூடி மகிழாத சொற்கள் பாடாத கவிதையாக மலர்ந்துவிடும் என்று காதலியே கவிதையாக உயர்த்தப்படுவதைக் காணலாம். காதல் அனைத்துத் தர மக்களுக்கும் தெரிந்தது தான் என்றாலும் அவற்றை அவர்கள் ரசிக்கும் வகையில் படைத்து அளிப்பது தான் கவிதை என்று அறிஞர் அண்ணா கூறியது முத்தமிழ் விரும்பியின் கவிதைகளுக்கு சாலப் பொருந்தும்.*

*அறிந்ததனை அறிந்தோர்க்கு*
*அறிவிக்கும் போதினிலே*
*அறிந்தது தான் என்றாலும்*
*எத்துணை அழகம்மா என்று*
*அறிந்தோரையும் வியக்க வைக்கும்*
*அருங்கலையே கவிதை ஆகும்.*

*என்றார் பேரறிஞர் அண்ணா. இதே கருத்தை*

*Poetry is the revelation of a feeling that the poet believes to be interior and personal which the reader recognizes as his own*

என்று ஜான் கீட்ஸ் எனும் ஆங்கிலக் கவிஞர் தெரிவித்தார். முத்தமிழ் விரும்பியின் தனி வாழ்க்கையில் நடந்த அல்லது அவர் நேரில் கண்ட மற்றும் கேள்விப்பட்ட நிகழ்வுகளை அவர் கவிதையாக்கி இருக்கலாம். ஆனால் அவற்றை வாசிப்போர் அந் நிகழ்வுகளைத் தமது வாழ்க்கையில் நடந்தவற்றுடன் ஒப்பிட்டு மகிழவும், நமக்கும் இது போல நடந்திருக்கலாமே என்று கற்பனை செய்து மகிழவும் ஏற்ற வகையில் இக்கவிதைகள் அமைந்திருக்கின்றன. ஜான் கீட்ஸின் கருத்துக்கும் அறிஞர் அண்ணாவின் கருத்துக்கும் ஏற்றவகையில் சிறப்பான கவிநயத்துடன் அமைந்தவை முத்தமிழ் விரும்பியின் காதல் கவிதைகளும் ஆகும்.

உள்ளத்துள்ளது கவிதை- இன்ப
உணர்வேடுப்பது கவிதை
தெள்ளத் தெளிந்த தமிழில் – உண்மை
தெரிந்துரைப்பது கவிதை

என்றார் கவிமணி. கவிதையின் இலக்கணம் என்பது வாசிப்பவர் தன மனதுள் கவிப்பொருளை உணர்ந்தி இன்புற வேண்டும். இதைத்தான் ஆங்கிலத்திலும்

*A GREAT POETRY is nothing in terms of words or literary techniques. It is purely felt*

என்றனர்.

**ஏக்கம்**

ஏகம் என்ற வடமொழிச் சொல் தமிழிலும் ஒன்று என்பதைக் குறிக்கின்றது. மணி வாசகர் சிவபுராணத்தில் சிவபெருமானை ‘ஏகன் அநேகன்’ என்பார். சிவன்

*ஒன்றாகவும் பலவாகவும் இருக்கிறான் என்பதே இவ்வாசகத்தின் பொருள். அது போல காதலில் ஏகனாக [தனியனாக] இருக்கும் போது உருவாகும் உணர்வு ஏக்கம் எனப்படுகிறது. ஏக்கத்தின் தவிப்பை தலைமகன் இயல்பு பற்றி கூறும் நூற்பாவில் தொல்காப்பியர் விளக்குகிறார்.*

*முன்னிலை ஆக்கல் சொல்வழிப்படுத்தல்*
*நல் நயம் உரைத்தல் நகை நனி உறாஅ*
*அந் நிலை அறிதல் மெலிவு விளக்குறுத்தல்*
*தன் நிலை உரைத்தல் தெளிவு அகப்படுத்தல் என்று*
*இன்னவை நிகழும் என்மனார் புலவர். (களவியல் 10)*

*தலைவியை முன்னிலைப்படுத்திப் பேசத் தொடங்குதல், தான் விரும்பியவற்றை அழகான சொற்களால் எடுத்துரைத்தல், அவளுடைய புன்னகை தவழும் முகத்தைக் கண்டு தன் மீதான காதலை உறுதி செய்தல், அவள் இல்லாப் பொழுதுகளில் தான் படும் வேதனையை அவளிடம் விளக்குதல், தன்னுடைய காதலை உரைத்து அவளைத் தெளிவாக்குதல் ஆகியவை தலைவனின் இயல்புகள் ஆகும். அன்று தொட்டு இன்று வரை காதலன் என்பவன் ஏறத்தாழ இதே முறையில் தனது காதலைப் பெண்ணிடம் உறுதி செய்கிறான்.*

*அவளைக் காணாத நேரங்களில் அவன் படும் வேதனையை ஏக்கம் என்ற உணர்வாகக் காதல் கவிதைகள் காட்டுகின்றன. தலைமகனுக்கு நிகழும் கூற்று வகைகள் பற்றிப் பட்டியலிடும் தொல்காப்பியர் அப்போதும்,*

*பெற்றவழி மகிழ்ச்சியும் பிரிந்தவழிக் கலங்கலும்*

*என்பார். இவ்வரி பெண்ணைப் தன்னகப்படுத்தி நுகர்ந்த போது அடைந்த மகிழ்ச்சியும் அவளைப் பிரிந்த*

போது ஏற்பட்ட கலக்கத்தையும் அவன் தன சொற்களால் வெளிப்படுத்துவான் என்கிறது.

**ஏக்கத்தின் சீற்றம்**

முத்தமிழ் விரும்பியின் காதல் கவிதைகளில் காதலனின் ஏக்கம் சொல்லொணாத் துயரமாக வெளிப்படுகிறது..

நான் சொல்லாத
சொல்

நான் கொள்ளாத
பொருள்

நீ இல்லாத
இடம்

மனம் கொள்ளாத
இருள்

அடடா
இந்தத் தனிமை
தரும்
கொடிய நாகப் பாம்பின் மூச்சென
இரைகிறது விடாமல் அடிக்கிற
ஆடிக்காற்று. (நீ இல்லாத இடம், **உன்னோடு உரையாடுதல்**)

என்ற கவிதை அவளைப் பிரிந்திருக்கும் ஏக்கத்தால் அவன் விடும் பெரு மூச்சு நாகப் பாம்பு சீறுவதைப் போல இரைகிறது. அத்துடன் அந்த உவமை முடியவில்லை. அடுத்த வரியிலும் தொடர்கிறது. அவன் விடும் பெரு மூச்சு ஆடிக் காற்றைப் போல விடாமல் அடிக்கின்றது. அது முடிந்த பாடில்லை. அவன் வாழ்வில் ஏக்கமும் பரிதவிப்பும் தொடர் கதையாகி விட்டது.

*காதலனின் வாழ்வில் காதலியைக் காணாத பொழுதுகளில் அவளைப் பிரிந்திருக்கும் கவலை அவனைத் தீயாகச் சுட்டெரிக்கிறது. அவளோடு இருபத்து நான்கு மணி நேரமும் இணைந்தே இருக்க வேண்டுமென்ற எண்ணம் உறுதி பெறுகின்றது. தன்னிடம் ஒரு வார்த்தை பேச மாட்டாளா என்று ஏங்குகிறான். அவள் பேசும் அந்த ஒரே ஒரு வார்த்தை அவனுக்கு முத்தமாக இனிக்கும் என்று நம்புகிறான்.*

*தனித்த பொழுதுகள்*
*எரிக்கின்றன.*

*எரிக்கும் நினைவுகள்*
*துணையாய்ப்*
*பிரிக்கும் இழைகள் காணும் நேரம்*

*வரமல்ல*

*வரமே அல்ல*

*வார்த்தை முத்தம் தா. (வார்த்தை முத்தம் தா,* ***காதல் மொழி****)*

*அவன் எதிர்பார்க்கும் வார்த்தை அவனுக்கு ஒரு முத்தத்துக்குச் சமம்.. எனவே வார்த்தை முத்தத்துக்காக அவன் ஏங்குகிறான்.*

## ***தூக்கமற்ற இரவுகள்***

*காதல் அவனை இரவிலும் பகலிலும் தூக்கமும் விழிப்புமற்ற நிலையை உருவாக்குகிறது. கனவும் கற்பனையுமாகக் கழியும் அவனது இரவும் பகலும் அவனுக்குள் பெருந்தவிப்பை உண்டாக்குகின்றன. அவளைப் பிரிந்த ஏக்கத்தால் அவன் இரவுகளில் தூக்கமின்றித் தவிக்கிறான். இரவில்*

*சமயா சமயத்தில்*
*நினைவலைகள்*
*துள்ளி எழுந்து*
*நனைக்கிறது குளிர்*

*இவள்*
*ராட்சசியா?*
*இல்லை*
*ரட்சகி தான்*
*என்கிறது*

*நள்ளிருள் விழிப்பு (ராட்சசியா?, **காதல் மொழி**)*

*என்ற கவிதையில் நள்ளிருளில் தூக்கத்தில் திடீரென எழுந்து அவளைப் பற்றி நினைத்துக் கொள்கிறான். இவ்வாறு தூங்க விடாமல் செய்கிறாளே இவள் ராட்சசியா என்ற வினாவும் அவனுள் எழுகின்றது.*

*பால் எட்வர்டு என்ற பிரெஞ்சு கவிஞர் காதலையும் தூக்கத்தையும் இணைத்து இரண்டு வரிகளில் அழகாக உணர்த்திவிடுகிறார்.*

*She will never close her eyes*
*And she does not let me sleep*

*அவள் தானும் உறங்கமாட்டாள்; அவனையும் உறங்க விட மாட்டாள். முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் அவனது ஏக்கமும் தூக்கமின்மையும் அனல் போல் எரிக்கும் பெரு மூச்சும் காட்டப்பட்டுள்ளது.*

**காத்திருத்தல்**

*முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் காத்திருத்தல் முக்கியப் பாடுபொருளாகக் காணப்படுகிறது. அவளுக்காகக் காத்திருத்தலை தவம் என்றும் அவளோடு உரையாடுதலை வேள்வி என்றும் அவர் குறிப்பிடுகிறார்.*

சங்க காலத்தில் ஒருவனுக்காக் ஒருத்தி காத்திருத்தலில் சில எதிர்பாராத ஏமாற்றங்களும் நடப்பதுண்டு. இருவரும் சந்திக்கத் திட்டமிடும் இடத்தைக் குறியிடம் என்று தொல்காப்பியம் சுட்டுகின்றது. குறியிடம் தெரிவித்தல் என்பது தலைவிக்குரிய சலுகை ஆகும். அவளே பகலில் வெளியிடத்திலும் இரவில் அவள் வீட்டுக்கருகே கூப்பிடு தொலைவிலும் குறியிடத்தை முடிவு செய்து அவனுக்குத் தெரிவிப்பாள்.

குறிக்கப்பட்ட இடம் மாறி புரிந்துகொள்ளப்பட்டு தலைவன் அங்கு வந்து வெகு நேரம் காத்திருந்து திரும்பிச் சென்றதும் உண்டு. இது ‘அல்ல குறிப்படுதல்’ என்று அழைக்கப்படும். அவள் ஒரு வேங்கை மரத்தடிக்கு வா என்று சொல்ல இவன் வேறு ஒரு வேங்கை மரத்தடியில் நின்று காத்திருந்து பார்க்க இயலாமல் திரும்பிச் செல்வான். முத்தமிழ் விரும்பியி இவ்வாறு அவன் மணிக் கணக்காக காத்திருப்பதைக் கவிதைகளாக வடித்துள்ளார்.

இந்த நாளும்
சுவடின்றிக் கடந்து
போகுமா

கடற்கரை மணல்
பதிவுருக்களைக் கடல்
அலைகள்
தானழிக்கும்

அவள் வரைந்த
கோலத்தின் புள்ளிகளை அவளே
அழிக்கிறாள்

இவனது கால அட்டவணை
அவளது கையில்

*தட்டுத் தடுமாறி விழுந்த*
*நண்பகலை*
*தலையாட்ட வைக்கிறாள்*

*நாளை தான் சந்திப்பு*
*என்றாள் போலும் (நெகிழி முத்தங்கள், **உன்னோடு உரையாடுதல்**)*

*என்ற கவிதை வரிகள் அவள் சொன்னது புரியாமல் இவ்வளவு நேரமும் காத்திருந்துவிட்டோமோ என்ற ஐயத்தை அவனுக்கு உண்டாக்குகிறது.*

*இன்றாவது*
*பயணத்தை மீண்டும்*
*தொடங்கலாமென்றால்*

*இன்னும்*
*எட்டப்படவில்லை*
*உடன்பாடு. (உடன்பாடு, **பார்வையில் பூத்த நிலா**)*

*என்ற கவிதையில் காத்திருந்து காத்திருந்து இன்றைக்கும் அவனால் அவர்களின் காதல் பயணத்தைத் தொடங்க இயலவில்லை; அவளைப் பார்க்க முடியவில்லை;. இன்னும் இருவருக்குள் ஓர் உடன்பாடு எட்டப்படவில்லை என்ற வருத்தம் அவனுள் ஒலிப்பதைக் கேட்கலாம்.*

*அவன் காலையில் இருந்து மாலை வரை அவளுக்காகக் காத்திருந்தும் எந்தப் பலனுமின்றி இனி நாளைக்கும் வர வேண்டுமா என்று தனக்குத் தானே கேட்கிறான். இவ்வாறு காத்திருக்கும் பொழுதுகளும் நாட்களும் நீண்டுகொண்டே போகுமா இதற்கு ஒரு முடிவே இல்லையா என்று வினவுகிறான்.*

*காற்றின் மூலம்*
*மீண்டும் மீண்டும்*
*குளித்தாயிற்று*

*இளம் வெயில்*
*தாகம் தணிக்க*
*இடம் மாறி*
*அமர்ந்தாயிற்று*

*இந்த பொழுதின்*
*நீட்சி*
*இன்றா*
*மாலையா*
*நாளைய காலையா (கிளிப்பாடல் தனி ரகம்,* ***உன்னோடு உரையாடுதல்)***

*இவ்வாறு வினவியவனின் மனம் சோர்ந்து போகவில்லை. அவனிடம் காணப்படும் அணையா தன்னம்பிக்கை முத்தமிழ் விரும்பியின் கவிதை இயல்புகளில் குறிப்பிடத்தக்க ஓர் அம்சமாகும்.*

*அகப் பொருள் வயின்*
*பிரிவு*

*பின் வரும் நிலையில்*
*பிறை நிலவு*
*வளரும் (கிளிப்பாடல் தனி ரகம்,* ***உன்னோடு உரையாடுதல்)***

*என்று கவிதை வரிகளில் அவன் இன்று பிறை நிலவாகத் தோன்றினாலும் விரைவில் வளர்ந்து முழு நிலவாகும் என்று தன காதலின் மேல் ஆழமான நம்பிக்கை வைக்கிறான்.*

## சந்திப்பு

*தொல்காப்பியர் காதலர் முகமுகமாக சந்திப்பதை விதியின் காரணத்தால் தாங்கள் தனியாக எதிர்ப்பட்ட போது நடைபெறும் நிகழ்வாகக் குறிப்பிடுகின்றார். 'பாலது ஆணையால் தாமே தனியராய்ச் சந்தித்து' என்கிறார். காதல் என்பது முற்பிறவியின் தொடர்ச்சி என்று ஆங்கிலக் கவிஞர்கள் கருதுகின்றனர். இறைவன் ஒரு மனிதனைப் படித்து இரு கூறாக்கி போடுவான் அவை இரண்டும் ஒன்றை ஒன்று தேடி வந்து இணைவது தான் காதல் என்கிறது கிரேக்கத் தொன்மக் கதை. இவ்வாறு முத்தமிழ் விரும்பியின் காதலர்களும் எழ் பிறப்பும் தொடர்ந்து வரும் சொந்தங்களாக இலட்சியக் காதலர்களாக விளங்குகின்றனர்.*

*முத்தமிழ் விரும்பியின் கவிதைக் காதலன் தன் காதலிக்காக மல்லிகைப் பூ வாங்கி வைத்துக்கொண்டு காத்திருக்கிறான். வெகு நேரம் காத்திருந்த பின்னர் தான் அவள் வந்தாள். வாங்கி வைத்த பூ வாடி விட்டது. இருப்பினும் அவள் வந்ததும் அந்த அவள் அந்த வாடிய பூச்சரத்தை மகிழ்ச்சியுடன் சூடிக் கொண்டாள். சந்திப்பு மகிழ்ச்சியாக இருந்ததை 'மலர்ந்தன மனசுகள்' என்ற கவிதை வரி உணர்த்துகிறது. காத்திருந்த வலியும் பறந்து போனது.*

*மலர்ந்தன மனசுகள்*

*உனக்கான*
*மல்லிகைச்சரம்*
*வாடுதே என்றேன்*

*வாடினாலும் வந்து*
*சூடுவேன் என்றாய்*

*நேரம் கழித்து வந்த*
*நிமிடமே*
*சூடினாய்.*

*மலர்ந்தன*
*மனசுகள்.*

*நிமிடங்கள் ஒளிரும்*
*பகலிலும் குளிர் (மலர்ந்தன மனசுகள்,* ***உன்னோடு உரையாடுதல்****)*

*சந்திப்பில்லா சந்திப்பு ஒன்றையும் முத்தமிழ் விரும்பி பதிவு செய்கிறார். கற்பனையில் தன் காதலியிடம் பேசிக்கொண்டிருந்த காதலன்*

*உன்னோடு*
*பேசிக் கொண்டிருக்கிறேன்*
*சன்னலின் வழியே*
*வெயிலின் தகிப்பை உள் வாங்கி*

*சந்திப்பில்லா விடினும்*
*சந்தித்தோம்*
*நீண்ட நாட்களுக்குப் பின்*

*என்கிறான். கற்பனையில் அவளுடன் பேசியதால் அவன் அவளைச் சந்தித்தது போல உணர்கிறான். இந்நிகழ்ச்சியைக் கவிஞர் 'சந்திப்பில்லா சந்திப்பு' என்கிறார். ரூமி காதலர் நேருக்கு நேர் சந்திக்காவிட்டாலும் அவர்கள் தங்களுக்குள் ஒருவருக்குள் ஒருவராக இருக்கின்றனர் என்றார்.*

*Lovers donot finally meet, somewhere*
*They are in each other all along*

*ரூமியின் இந்த வரிகள் காதலின் மகத்துவத்தை சந்திப்பில்லா சந்திப்பின் மூலமாக உணர்த்துகின்றன.*

*முத்தமிழ் விரும் , காதலர்கள் தாம் சந்தித்த வேளைகளில் நேரம் காலம் அறியாமல் பேசிக் கொண்டிருப்பதை கவிதைகளில் பதிவு செய்துள்ளார்.*

அவர்கள் நீண்ட தொலைவு பேசிக்கொண்டே நடந்து சென்றதையும் கவிதையாக்குகிறார்.

**முன்பெல்லாம்..**

முன்பெல்லாம்
இருவரும்
உரையாடிக்கொண்டே
விரிந்த நெடுஞ்சாலையின்
பெருந்தொலைவை
நொடி நேரத்தில் கடந்ததாய்
உணர்ந்திருக்கிறேன் (முன்பெல்லாம்..,
**உன்னோடு உரையாடுதல்)**

இவ்வாறு இருவரும் சந்தித்துப் பிரியும் வேளையில் காதலியின் விடை பெறுதல் குறித்து ஓர் அழகிய கவிதையை முத்தமிழ் விரும்பி இயற்றியுள்ளார்.

சொன்ன போதெல்லாம்
விடை பெறவில்லை
விடைபெற்றபோது
சொல்லவில்லை [பூ மர நிழல்]

அவள் கிளம்புகிறேன் என்று சொல்லிக்கொண்டே இருந்தாள்; அப்போது புறப்படவில்லை. திடீரென்று சொல்லாமல் கொள்ளாமல் நடந்து விட்டாள். அவனுக்குக் கவலை மிகுந்து விட்டது. 'சொல்லிக் கொள்ளாமல் போய்விட்டாளே' என்று வருந்துகிறான். காதலரின் இன்பத்துக்கும் துன்பத்துக்கும் ஒரு சொல், ஒரு பொருள், ஒரு படம் கூட போதுமானது என்பதால் அவர்களுக்குள் இன்பமும் துன்பமும் திடீர் திடீரென மாறிமாறி வருவது இயற்கை.

**நலம் பாராட்டல்**

நலம் பாராட்டல் என்பது காதலன் தன காதலியின் உடல் அழகினைப் பாராட்டிக் கூறும் மொழிகள் ஆகும். மனித இனம் தோன்றிய காலத்தில் இருந்தே ஆண்

*பெண்ணை வருணித்துப் பேசி அவளை மகிழ்விப்பது நடந்து கொண்டு தான் இருக்கிறது. பாரதியார்*

*சுட்டும் விழிச் சுடர் தான் –கண்ணம்மா*
*சூரிய சந்திரரோ*
*வட்டக் கரியவிழி - கண்ணம்மா*
*வானக் கருமை கொல்லோ*
*பட்டுக் கருநீலப் – புடவை*
*பதித்த நல் வயிரம்*
*நட்ட நடு நிசியில் – தெரியும்*
*நட்சத்திரங்களடி*

*என்று கண்ணாம்மாவை நலம் பாராட்டி மகிழ்கிறார்.*

**புதுமையான உவமைகள்**

*பண்டைய மரபில் வந்தவர்கள் பயன்படுத்திய உவமைகளைப் பயன்படுத்தாமல் புதிய உவமைகளைப் பயன்படுத்தி நலம் பாராட்டல் கவிதை ஒன்றை முத்தமிழ் விரும்பி சொல்லோவியமாகத் திட்டியுள்ளார்.*

## முட்டித் தழுவும் இளவேனில்

*வெண் தோள் தொட்டு விளையாடும்*
*நெளி பனைக்கூந்தல்*
*மலர் மணம்*
*நாகப் படமெடுத்தாட*
*மகுடியான*
*எனதிரு கண்கள்*

*நீயும் நோக்க*
*யாழ் வண்டுகள்*
*விழும் பாதவிரல்*
*தொட்டு நாகப் பூவில்*
*முட்டித் தழுவும் இளவேனில் (முட்டித் தழுவும் இளவேனில், **உன்னோடு உரையாடுதல்**)*

*இருவரும் இளவேனில் காலத்தில் சந்தித்து உரையாடி மகிழ்ந்தனர். அப்போது அவளைச் சந்தித்ததும் அவளது அழகை அவன் வருணிக்கின்றான். காதலியின் நெளிநெளியான பனை நிறத்தில் உள்ள கருமையான கூந்தல் அவளது வெண்மையான தோள்களைத் தொட்டு விளையாடுகிறது. குறுந்தொகையில் 'கூந்தல் நுண் மணல் அறல் வார்ந்தன்ன [116] என்று வருணிக்கப்படும் கரு மணல் போல அலைஅலையான கருமையான கூந்தல் என்பது மரபு. ஆனால் முத்தமிழ் விரும்பி கருமைக்கும் நெளிநெளியான தன்மைக்கும் வரிவரியாகத் தோன்றும் பனை மரத்தை உவமிக்கிறார்.*

*காதலியின் கூந்தலில் இருந்த மலர் மணம் நாகம் போல படமெடுத்தாட காதலனின் கண்கள் அப்பாம்புக்கு மகுடி ஊதியது. அவளது மலர் மணத்தை நுகர்ந்து மகிழ்ந்த அவன அவளது முக வனப்பை ரசித்தான். அவள் அவனை ஏறிட்டு நோக்கினாள். இராமாயணத்தில் இராமன் சீதை ஆகியோரின் பார்வைகள் சந்தித்ததை,*

> *அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்*
> *இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினர்*

*என்று கம்பர் பாடினார். வள்ளுவரும் இத்தகையதொரு காட்சியை அழகாக*

> *யானோக்குங்கால் நிலனோக்கும் நோக்காக்கால்*
> *தானோக்கி மெல்ல நகும்.*

*என்றார். அவன் அவளைப் பார்க்கும் போது அவள் நாணம் தாங்காமல் நிலத்தை பார்க்கிறாள் என்கிறது வள்ளுவம். அவனது பார்வையின் கூர்மையைத் தாளமுடியாமல் அவள் கீழே தனது கால் விரல்களைப் பார்த்தாள் என்கிறார் முத்தமிழ் விரும்பி. இருவரும் நேருக்கு நேர் பார்த்த மறு நொடியே அவள் தன் பாதம் பார்த்ததாகப் பாடுகிறார்.*

*எனதிரு கண்கள்*
*நீயும் நோக்க*
*யாழ் வண்டுகள்*
*விழும் பாத விரல்   (முட்டித் தழுவும் இளவேனில்,*
***உன்னோடு உரையாடுதல்)***

*என்றார். காதலியின் விழிகள் வண்டுகளை ஒத்திருந்தன. அதுவும் பண்ணிசைக்கும் யாழ் வண்டுகள். அந்த இரு விழிகளும் இசை பாடும் வண்டு விழிகள் என்றுநலம் புனைந்துரைக்கிறான் இக்கவிதைக் காதலன்.*

*முத்தமிழ் விரும்பி காதலி நாணத்தால் தலை கவிழ்ந்தாள்; தனது பாதங்களை நோக்கினாள் என்பதை அவளின் யாழ்வண்டு விழிகள் பாத விரலில் விழுந்தன என்றார். அதன்பிறகு அவளது கால் விரலில் இருந்து இளவேனில் காலத்தின் வருனணையைத் தொடங்குகிறார். பாதத்தின் விரலைத் தொட்டு நாகப்பூவில் முட்டி இவர்களைத் தழுவி நிற்கிறது இளவேனில் காலம். இவ்வாறு இக்கவிதை சங்க காலத்தின் முதற்பொருள் கருப்பொருள் என்ற இலக்கண வகையின் படி இளவேனில் காலத்துச் சிறு பொழுதை சொல்லிச் செல்லும் போதே இக்காலத்து இணையத்துக்கும் வந்து தொட்டு விடுகிறது.*

*யாழ் வண்டுகள்*
*விழும் பாதவிரல்*
*தொட்டு நாகப் பூவில்*
*முட்டித் தழுவும் இளவேனில்*
*சிறு பொழுதொன்றில்*
*பல்கதிர் விரியும்*
*பார்வைகளின் புள்ளி*
*இணையம்  (முட்டித் தழுவும் இளவேனில்,*
***உன்னோடு உரையாடுதல்)***

எனக் கவிஞர் பழமையையும் புதுமையையும் இணைத்து அரிமா நோக்குடைய கவிதைகளைப் படைத்துள்ளார்.

## மெய்யறிவு

காதல் என்பது மெய் தொட்டுப் பழகுவதால் கிடைக்கும் மெய் அறிவு மட்டுமல்ல நல்லது எது தீயது எது என்று பகுத்தறியும் அறிவையும் தர வல்லது. அடங்காத காளையாகத் திரியும் ஒருவனைக் கூட காதல், கல்யாணம் போன்றன கட்டுத்தறி காளையாக்கி விடுவது இயற்கை. கிறிஸ்துவத் திருமறையில் ஏதேன் தோட்டத்தின் விலக்கப்பட்ட கனியைத் தின்ற பிறகு தான் ஆதாமுக்கும் ஏவாளுக்கும் தாம் நிர்வாணமாக இருப்பது புரிந்தது. பின்பு இருவரும் இலைதழைகளால் ஆடை நெய்து உடுத்தினர். அதுவரை அவர்கள் ஆடு மாடுகள் போல உடை உடுத்தாமல் இருந்தனர். அவர்களுக்கு மானம் என்ற ஞானத்தை உணர்த்தியது ஏவாள் மீது ஆதாம் கொண்ட காதலும் அதனால் கிடைத்த ஞானக் கனியும் ஆகும். அவன் காதலால் கட்டுண்டு ஏவாள் சொன்ன கனியை உண்டான். அதன் பிறகு அவர்களுக்கு குழந்தை பிறந்து குடும்பமாக வாழ்த் தொடங்கினர். ஆதாமே முதல் குடும்பன் ஆனான். அவனிடமிருந்து மனித இனம் செழித்தது. . ஆதாம் தன் காதலியின் சொல்லைக் கேட்டு கனியை உண்ணாமல் இருந்திருந்தால் இன்று வரை அந்த இருவர் மட்டுமே இவ்வுலகில் இருந்திருக்கலாம். ஆக காதல் என்பது ஒருவனுக்கு மெய்யறிவையும் அளிக்கின்றது.

ரூமி என்றொரு ஆங்கிலத் தத்துவ ஞானி பெண்ணை ஆன்மிக ஒளி என்றே போற்றுகிறார்.

*A woman is a beam of the divine light.*
*She is not the being whom sensual desire takes its object*

*என்று பெண்ணின் பெருமையை விவரிக்கிறார். பெண் புத்தி பின் புத்தி என்பதும் பெண்ணுக்குரிய நான்கு குணங்களாக அச்சம் மடம் நானம் பயிர்ப்பு என்பவற்றைப் பட்டியலிடும் போது மடம் என்பது பெண் எப்போதும் தன கணவன் முன்பு அறிவு குறைந்தவளாகக் காட்டிக்கொள்ள வேண்டும் என்பதும் தவறான போக்குகள் ஆகும். தொல்காப்பியத்தில் தலைவிக்குரிய இயல்பு பற்றிய நூற்பாவில்*

*அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த*
*நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப [1045]*

*பெண்டிர்க்கு அச்சம் நாணம் மடம் ஆகிய இயல்புகள் எப்போதும் உண்டு என்கிறார். ஆனால் காதல் வரும் போது பெண் புத்திசாலி ஆகிறாள். அவன் அவளிடம் விளக்கம் பெறுகிறான்.*

**வள்ளுவர் வாக்கு**

*அறிவுடைமை, கல்வி, கல்லாமை என்று பல அதிகாரங்களைப் படைத்த திருவள்ளுவர் காதலில் கிடைக்கும் அறிவு பற்றி புணர்ச்சி மகிழ்தல் என்ற அதிகாரத்தில் ஒரு கருத்தை முன் வைக்கிறார்.*

*அறிதோறும் அறியாமை கண்டற்றால் காமம்*
*செறிதோறும் சேயிழை மாட்டு [1110]*

*என்கிறார். ஒவ்வொரு முறை ஒன்றைப் படிக்கும் போதும் இதுவரை அதனை அறிந்துகொள்ளாமல் இருந்தோமே என்று தனது அறியாமையை ஒருவன் உணர்வது போல பெண்ணிடம் இணைந்து மகிழும் போதெல்லாம் இதுவரை இவ்வின்பத்தை அறியாமல் இருந்துவிட்டோமே என்ற எண்ணம் அவனுக்குத் தோன்றுகிறது. அறிவுக்கு எல்லையில்லாதது போல இப்புணர்ச்சி மகிழ்தலுக்கும் எல்லை இல்லாத காரணத்தால் 'செறிதோறும்' [அவளைச் சேருந்தோறும்]*

*என்ற சொல்லை வள்ளுவர் பயன்படுத்தியதாக உரைகாரர் கருதுவர். இதே கருத்தை*

*The more we study*
*The more we discover our ignorance*

*என்று பி பி ஷெல்லி எனுமோர் ஆங்கிலக் கவிஞன் குறிப்பிட்டான். முத்தமிழ் விரும்பியின் கவிதை நாயகனுக்கும் அறியாமை தோன்றுகிறது. அவன் அதை அவளிடமே சொல்லித் தெளிவு பெறுகிறான்.*

*வேறுபாடறியா*
*காதல் துறை சிறுவன்*
*அருஞ்சொல் பொருள்*
*விளக்கம் தேடுகிறான்*
*அவளிடமே (காதல் துறை,* ***காதல் மொழி****)*

*ஆங்கிலக் கவிஞன் ஒருவன்*

*In your light*
*I learn how to love*

*என்றான். இவ்வரிகள் அவள் ஒரு புத்தம் புதிய புத்தகமாக இருப்பதால் அவன் முழுமையாகத் தெரிந்துகொள்ள அவளிடமே அருஞ்சொல் பொருள் விளக்கம் கேட்டு தெளிவு பெறுவதை உணர்த்துகின்றன. இன்னொரு சமயத்தில் அவளுக்கு காதலின் கலைகள் புரியவில்லை என்பதால் மனம் நொந்து இவனது கருத்துக்களை அவள் புரிந்துகொள்ள இயலாதவளாக இருப்பதை உணர்ந்து அவளிடமே சரணடைகிறான்.*

*ஊடலுக்கும்*
*விலகலுக்கும்*
*சண்டைக்கும்*
*இடைவெளி தெரியா நேரத்தில்*
*அவளிடத்திலேயே*
*விளக்கம் தேடி அவளிடமே சரணாகிறான்*

*இருள் மேவ*
*புது நிலவொளி*
*மனசெங்கும்..* *(புது நிலவொளி, **காதல் மொழி**)*

*சரணடைந்த பிறகு அவன் மனதில் புதிய ஒளி பிறக்கிறது. புரியாமல் இருந்த புதிர் அனைத்தும் விடைபெறுகிறது.*

*அவளுக்கு ஊடலுக்கும் சண்டைக்கும் விலகலுக்கும் இடையிலான வேறுபாடு தெரியவில்லை. வள்ளுவர் 'காதல் புணர்தலின் ஊடல் இனிது [1326] என்றார். 'ஊடுதல் காமத்திற்கு இன்பம்' [1330] என்றும் ஊடலின் சிறப்பை தமது திருக்குறளில் முத்தாய்ப்பாக எடுத்துரைத்தார். அத்தகைய சிறப்பு வாய்ந்த ஊடலை அவள் சண்டையாகப் புரிந்து கொண்டு அவன் அவளை விட்டு விலகப் போவதாகக் நம்பிக் கலங்குகிறாள். அவளது கலக்கத்துக்குக்கான காரணம் அறியாமல் அத்தருணத்தில் அவன் அவளிடமே விளக்கம் கேட்டுச் சரணடைகிறான். காதலில் தோற்றவர்கள் வெற்றி பெற்றதாகக் கருதப்படும் இலக்கணத்தின் படி அவன் அவளிடம் சரணடைந்து வெற்றியைத் தழுவினான். அதன் பிறகு மனசெங்கும் குளிர்ச்சியான நிலவொளி பரவி தெளிவு பிறக்கிறது, அவன் தேடிய இன்பம் கிடைக்கிறது.*

*நிலவொளி என்பதை சாக்தத்தில் உச்சியில் இருந்து இறங்கும் அமுத நிலை என்பர். அபிராமி பட்டர் சக்தி பக்தர். இவர் குண்டலினி யோகத்தால் இவ்வமுதப் பொழிவை எழுபத்தீராயிரம் நாடிகளிலும் பரவசமாக உணர்ந்த வேளையில் அரசன் 'இன்று என்ன திதி?' என்று கேட்டதால் அவர் பௌர்ணமி என்றார். கண்ணதாசன் உச்சிக் கமலத்தில் இருந்து அமுத நிலை இறங்கும் வேளையில் ஜனிக்கும் குழந்தைகள் உயர்ந்த பண்பினராக இருப்பார்கள் என்று குறிப்பிடுவார். 'புது நிலவொளி' என்ற கவிதைத் தொடர் என்பது உச்சியில் இருந்து இறங்கி உடல் முழுக்க பரவும் அமுத நிலையின் பரவசத்தை உணர்த்துகிறது.*

***நினைவுகள்***

*காதலில் நடந்தவற்றை நினைத்து பார்ப்பதும் நடக்க வேண்டியவற்றை கற்பனை செய்வதும் காதலருக்குத் தீராத ஆசை ஆகும். இந்த ஆசை முத்தமிழ் விரும்பியின் கவிதை காதலனுக்கும் உண்டாகிறது. அவளைப் பற்றி அவன் நினைக்கும் போதே,*

*இறைக்க இறைக்க*
*பொங்கி வழிகிறது*
*நினனைவின்*
*கேணி (ஊஞ்சல் மனசு, **உன்னோடு உரையாடுதல்**)*

*என்கிறார். அவள் ஊரில் அவன் உலாவும் போது அவள் நினைவுகள் பொங்குகின்றன.*

*இன்று*
*மாலை முதல்*
*உனது ஊர் தான்*

*வெக்கையடித்தாலும்*
*நீ*
*உலாவும் இடமெல்லாம்*
*நினைவுகளின் இதம் (உனது ஊர்தான், **உன்னோடு உரையாடுதல்**)*

*என்று மகிழ்கிறான். அவளது நினைவுகள் இதமாக இருந்து இறைக்க இறைக்க கேணியாக ஊறி இப்போது பெரு நதியாகிவிட்டது.*

*காலத்தில் கரைத்த*
*பெருங்காயமென*
*நினைவுப் பெரு நதி*
*விரல்களும்*
*வீணையும் தனி. (நினைவுப் பெருநதி, **தேனடையும் வரலாறு**)*

*என்ற கவிதையில் காலவோட்டத்தில் நினைவுகள் கரைந்து போகின்றன. நீயும் நானும் வீணையும் விரலுமாய்த் தனித்தனியாக இருக்கிறோம். ஆனால் இந்த விரல்கள் மீட்டிய இசை என்னும் காதல் மட்டும் தங்கிவிடுகிறது. நினைவுகள் காலப் பெரு நதியில் கரைத்த பெருங்காயம் போலக் கரைந்து போகிறது என்கிறார் கவிஞர். மாயா ஏஞ்ஜெலோ என்ற ஆப்பிரிக்கப் பெண் கவிஞர் காதலின் நினைவுகளைப் போற்றும் வகையில் எழுதிய Remembrance என்ற கவிதையில் காதலனோடு கூடி மகிழ்ந்ததைச் சொல்லிவிட்டு பின்பு*

> *When you withdrawn yourself and the magic*
> *When only the smell of your love lingers between my breasts*
> *Then*
> *Only then*
> *Can I greedily consume your presence?*

*என்கிறார். அவன் அவளை விட்டு நீங்கிய பின்பும் அவனது காதல் வாசனையை அவளால் நுகர்ந்து இன்புற முடிகிறது. இவ்வாசனையே நினைவின் சுகந்தமாக இருவருக்கும் தோன்றுகிறது. முத்தமிழ் விரும்பியின் கவிதையில் அவள் கிளம்பிப் போன பின்பும் தானியங்கி வண்டியில் அவள்கை கோர்த்ததால் ஏற்பட்ட வெப்பம் தன உள்ளங்கையில் தங்கியிருப்பதை காதலன் உணர்கிறான் முத்தமிழ் விரும்பி காதல் கவிதைகளில் இவ்வாறு பலவகையான மென்மையும் நுண்மையும் நிறைந்த காதல் உணர்வுகளைச் சுவைபட உணர்த்துகிறார்.*

*அரிஸ்டாட்டில் நினைவுகள் பற்றி குறிப்பிடும் போது பொருள் வழி நினைவு [material memory] என்றொரு வகையைக் குறிப்பிடுவார். ஒரு பொருளைக் காணும் போது அந்தப் பொருளின் முலமாக ஒருவருக்குச் சில நினைவுகள் தோன்றுமாயின் அதனைப்*

*பொருள் வழி நினைவுகள் என்போம். இதனை உளவியல் அறிஞர் நினைவுகளின் தொடர்பு [association of thoughts] என்பர். சங்க இலக்கியத்தில் ஐங்குறுநூற்றில் [375] தலைவி தலைவனைத் திருமணம் புரியும் நோக்குடன் தாய் வீட்டை விட்டுச் சென்ற பின்பு அவளை வளர்த்த செவிலித் தாய் அவள் வைத்து விளையாடிய பொம்மைகளையும் அவள் பேசி மகிழ்ந்த கிளிகளையும் பார்த்து இவை என் செல்ல மகளுக்கு விருப்பமானவை அன்றோ இவற்றையும் பிரிந்து சென்றுவிட்டாலே என்று அவற்றைப் பார்த்து பார்த்து அழுகிறாள்,*

> *இதுவென் பாவை பாவை; இதுவென்*
> *அலமரு நோக்கின் அலம்வரு*
> *சுடர் நுதல் பைங்கிளி எடுத்த பைங்கிளி;*
> *காண்தொறும் காண்தொறும் கலங்க*
> *நீங்கினளோ என் பூங்கண்ணோளே*

*என்ற பாடல் பொருளைப் பார்த்து நினைவுகளை மீட்டுவதற்குத் தக்க சான்றாக விளங்குகிறது. அங்ஙனம் முத்தமிழ் விரும்பியின் கவிதையில் காதலனுக்கு ஒரு பொருளும் செயலும் அவள் நினைவை அவனருகில் அழைத்து வருகிறது.*

> *பச்சை மண் கலயத்தில்*
> *நுழைந்த சிறு பாம்பு குட்டி*
> *உன் நினைவை*
> *அழைக்கிறது (வடு, **பார்வையில் பூத்த நிலா**)*

*இத்துடன் மாயா என்ஜெலோ தனது கவிதையில் the smell of your love lingers between my breasts என்று சுட்டிக் காட்டியபடி இந்தப் பொருட்கள் உண்டாக்கிய நினைவு அவனுள் ஒரு வாசனையையும் கொண்டு வருகிறது. அது ஒரு புளிப்பு வாசனை,*

*வற்றிக் காய்ந்த*
*கள் குடத்தைத்*
*தழுவிக் கிடக்கும் சிறு துளிகள்*
*சொல்லுமந்த புளிப்பின் வாடை*

*என்று அந்த வாடையை அவன் நினைவு கூர்கிறான்.*

**நுகர்ச்சியின் நினைவுகள்**

*காதலனை முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் புலனுகர்ச்சிக் கவிதைகள் சில உண்டு,*

*மலரினும் மெல்லிது காமம் சிலரதன்*
*செவ்வி தலைப் படுவர்*

*என்றார் வள்ளுவர். மலரினும் மெல்லிய காமத்தை நுண்ணிதின் உணர்ந்தோர் வாசித்து இன்புறும் வகையில் இக்கவிதைகள் அமைந்துள்ளன. இவை வாசிப்போருக்கு காதலுவகை அளிக்கக் கூடிய இனிய சொல்லோவியங்கள் ஆகும். காதலின்பம் என்பது மானுடப் பொது என்பதால் முத்தமிழ் விரும்பியின் கவிதையை ஆங்கிலத்தில் வாசித்தவர்களும் இவ்வின்பத்தை நுண்ணிதின் உணர்ந்து விரிவாகப் பாராட்டினர். பூ மர நிழல் தொகுதியில் காணப்படும் எதிர் என்ற கவிதையில் ஐம்புலன் இன்பமும் இருப்பதாக அமெரிக்காவைச் சேர்ந்த மானுடவியல் அறிஞர் முனைவர் நிகோல் பெர்கர் தன்னுடைய திறனாய்வில் தெரிவித்தார் .[In this poem, the early stanzas establish a sensual mood, invoking eeach of the senses, smell [fading smell of the jasmine], taste [the cherry fruits shared];touch [kisses gathered on red lips]; hearing [a husky moan]and sight [silence of your smile].*

**எதிர்**

*இவ்வாறு முத்தமிழ் விரும்பியின் காதல்; கவிதைகள் காதலர் இருவரின் நுண்ணிய உணர்வுகள் உருப்பெருக்கி*

*கொண்டு கண்டாற்போல தெளிவாக கண்டுணர்ந்து தக்க சொற்களை தக்க இடத்தில் பெய்து [right words in right place] அளவில் கூடாமலும் குறையாமலும் நறுக்குத் தறித்தாற் போல கவிதைகளை அமைத்துள்ளார். காதல் என்ற நூலைக் கொண்டு பலவகை பாடுபொருள் என்ற மலர்களைத் தொடுத்து நறுமணம் வீசும் காதல் கதம்பமாக்கி வாசகருக்குக் தொடுத்துள்ளார். இவரது காதல் கவிதைகளில் காத்திருத்தல் , சந்தித்தல், பிரிதல், நினைவுகள் என பல்வகை நிகழ்வுகளும் உணர்வுகளும் சங்க இலக்கியத்தில் இருப்பதைப் போன்று குறிப்பால் உணரும் வகையில் செம்மையாகவும் இனிமையாகவும் அமைந்துள்ளன. காதலைப் பற்றி அவர் சொல்லி உணர்த்தியது பாதி சொல்லாமல் உணர்த்தியது மீதி என்றளவில் கவிதைகள் நுட்பமாகவும் திட்பமாகவும் அமையப் பெற்றுள்ளன.*



## முரண் சுவை

*முத்தமிழ் விரும்பியின் காதல் கவிதைகளில் சொல்லிலும் பொருளிலும் மாறுபட்ட சுவை பொதிந்து கிடக்கின்றது. இன்பம் - துன்பம்; காத்திருத்தல் - சந்திப்பு; உரையாடுவதற்கான ஏக்கம் – மறுமொழி கூறாத மௌனம் என்று பல வகையான முரண் சூழல்கள் காணப்படுகின்றன. சங்க இலக்கிய அகத்திணை புறத்திணை கருத்துக்களும் இன்றைய இணையம் புலனம் போன்றவையும் காதல் கவிதைகளில் இடம்பெற்றுள்ளன. இரவும் பகலும் போல யின் - யான் கொள்கையைப் போல வள்ளுவப் பெருந்தொகை முத்தாய்ப்பாக*

> *ஊடுதல் காமத்திற்க்கு இன்பம் அதற்கின்பம்*
> *கூடி முயங்கப் பெறின் [1330]*

*என்று ஊடலையும் கூடலையும் எடுத்துரைத்ததைப் போல முத்தமிழ் விரும்பியின் கவிதைகளிலும் வாழ்வின் யதார்த்தத்தை உணர்த்தும் முரண் சுவை பெருகக் கிடைக்கின்றது.*

### காதல் ஜோதி

*காதல் என்பது ஒளி விசும் விளக்கைப் போன்றது. விளக்கு என்பது தான் இருக்கும் இடத்தையும் தன்னையும் விளக்கி [காட்டி] அருகில் உள்ள*

பொருட்களையும் விளக்குவதால் விளக்கு என்ற காரணப் பெயர் பெற்றது என்பர். அது போல காதல் தன்னையும் விளக்கி அருகில் உள்ளவரின் உள்ளக்கிடக்கையையும் காதலருக்கு விளக்கிவிடும். முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் காதலை வெளிப்படுத்தாத காதலியும் அதை அறிந்துகொள்ளத் துடைக்கும் காதலனின் உள்ளக்கிடக்கையையும் பல கவிதைகளில் காணலாம். அவளது காதலை அறிந்துகொள்ளத் துடிக்கும் அவனது ஆவலும் படபடப்பும் காதலை எவரும் மறைக்க இயலாது என்ற உலகளாவிய கோட்பாட்டை உறுதி செய்வதாக் அமைந்தது.

*You cannot hide love*
*Love will get on its way*
*To the heart of someone you love*
*Far or near, it goes home*
*To where it belongs*
*To the heart of the lovers [Rumi]*

என்ற கவிதை வரிகள் காதலர் தம் காதலை மறைக்க இயலாது அவை தாமாகவே வெளிப்பட்டுவிடும் என்பதை உறுதி செய்கிறது. ஒருவரின் காதல் தனது காதலரின் இதயத்தை நாடிச் சென்றுவிடும் என்கிறார் ரூமி. இந்த காதல் பயணத்தை முத்தமிழ் விரும்பியின் காதல் கவிதைகளில் அதிகளவில் காணலாம்.

## காதல் தரும் துணிவும் பயமும்

முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் [உன்னோடு உரையாடுதல்] வரும் காதலன் வலிமையான உள்ளம் கொண்டவனாகத் திகழ்கிறான். அவன் சோர்வுற்ற வேளைகளிலும் தன்னம்பிக்கை மிகுந்தவனாக காணப்படுகிறான். சோர்வும் துணிவுமான இந்த முரண்பாடு காதலின் தொடக்கத்தில் எல்லோருக்கும் ஏற்படுவதுண்டு.. ஆங்கிலக் கவிஞர் வில்லியம்

*வர்ட்ஸ்வர்த் தனது கவிதை ஒன்றில் காதலின் வலிமையை வசதியை முரண் சுவையுடன் எடுத்துக் காட்டுகிறார். காதல் என்பது, ஒன்று உங்கள் மூளையைச் உற்சாகப்படுத்தும் அல்லது இதயத்தை நொறுக்கிவிடும் என்கிறார்.*

*There is a comfort in the strength of love*
*It will make a thing endurable*
*Which also would overset your brain*
*Or break the heart.*

*இவ்வாறும் காதல் காதலர்க்கு அசாத்தியமான வலிமையையும் துணிவையும் வழங்குகிறது. காதலர் தம் காதலை உறுதிப்படுத்தி கொண்ட சூழலைப் பற்றி சொல்லும்போது அவர்கள் நேற்று நம்மை குழப்பாமல் இருந்தால் நாம் குழம்பியிருப்போம் என்ற வரிகள் முரண் சுவை ததும்ப அவர்கள் குழப்பியதில் நாம் தெளிந்துவிட்டோம் என்ற தகவலை அளிக்கிறது. காதலை திருமணமாக நிறைவேற்றி வெற்றி அடையச் செய்யும் முயற்சியில் உண்டான அனுபவங்களையும் இனிப்புக்கு [திருமணத்துக்கு] முன் ஏற்பட்ட கசப்பையும் கவிதையில் காணலாம். காதலரின் திருமணத்துக்கு பின்னர் இனிப்பில் சில கசப்பு துளிகள் கலந்துவிட்ட காட்சிகளும் கவிதை ஆக்கப்படும் போது,*

*என்ன செய்வது*
*வாழ்க்கை ஒரு*
*வானவில்* *(ஒரு வானவில், **உன்னோடு உரையாடுதல்**)*

*என்று அக்கவிதை நிறைவு பெறுகிறது. காதல், கல்யாணம் என எதுவாக இருந்தாலும் வாழ்வில் முரண் சுவை என்பது தவிர்க்க இயலாதது. அத்தகைய காதலை கவிதையில் வடிக்கும் போது முரண் சுவை தித்திப்பாகவே காணப்படுகிறது.*

முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் அமைந்த முரண் சுவையை அவரது ‘காதல் மொழி’யின் ஆங்கில மொழிபெயர்ப்பைத் திறனாய்வு செய்த அமெரிக்க தமிழ் மாணவி திருமதி மார்சி பவர்,

*He plays with a juxtaposition of emotions from the very beginning of the collection* என்கிறார்.

பின்பு தனது கருத்துக்கு ஓர் எடுத்துக்காட்டும் தருகிறார்.

*In the second poem A Demoness, he asks*
*Is she*
*A demoness*
*No, never*
*A savior.*

ஆக முத்தமிழ் விரும்பி தனது கவிதைகளில் கருத்திலும் சொல்லிலும் முரண் சுவைகளைப் படைத்தளிப்பதில் வல்லவராகத் திகழ்கிறார். காதல் கவிதைகள் தவிர மற்ற பொதுக் கவிதைகளிலும் இம் முரண் சுவை நிறைய காணப்படுகின்றது. உன்னோடு உரையாடுதல் கவிதை தொகுப்பில் ஏராளமாக உள்ளது.

## இருள் - ஒளி

உன்னோடு உரையாடுதல் கவிதைத் தொகுப்பு காதலிக்காகக் காத்திருக்கும் காதலனைப் பற்றி அதிகக் கவிதைகளைக் கொண்டிருப்பதால் காதல் கனியுமா காயாகி விடுமா என்று ஏங்கும் நிலையில் பல் முரண் சுவை கவிதைகளையும் கவிதை வரிகளையும் காணலாம். தூக்கமில்லாத அவனது இரவு, திடீரென தூக்கத்தில் விழித்துக்கொண்ட நிலை போன்ற நிகழ்ச்சிகள் அவனுக்குள் குழப்ப நிலையைத் தோற்றுவிக்கிறது. காதல் சுகமானது என்றாலும் அது நிறைவேறும் வரை காதலர் படும் அவதி தாங்க முடியாத சித்திரவதை

*என்பதை விளக்கும் இத்தொகுப்பின் பல கவிதைகள் முரண் சுவை பட விளங்குகின்றன.*

*இந்த இரவு*
*ஏனிப்படி ஆயிற்றெனத்*
*தெரியாது*

*தனிமை-*

*நெருக்கமும் ஒளியும்*
*கலந்த இருளாகிறது (ஏனிப்படி ஆயிற்று?,* ***காதல் மொழி****)*

*தனிமை அவனை காதல் நினைவுகளோடு நெருக்கமாக்குகிறது, அதனால் அவன் தன்னை சுற்றி ஒளி நிலவுவதைப் போல் உணர்கிறான். ஆனால் அக்காதல் நிறைவேறுமா என்ற எண்ணம் அந்த ஒளியை இருளாக்கி விடுகிறது. காதலின் நினைவுகளோடு கூடிய அந்த இரவு தூக்கமில்லாத சுகமான இரவாக நீண்டு கொண்டே போகிறது. காதலனால் ஒளியும் இருளும் ஒரே சமயத்தில் உணரப்படும் விந்தை காதலில் மட்டுமே சாத்தியம்.*

## வெற்றி - தோல்வி

*காத்திருந்து காத்திருந்து அவளைக் காண இயலாத பொழுதுகளில் அவன் மனம் தன்னிரக்கம் கொள்கிறது; ஆனாலும் உடைந்து போய்விடவில்லை. எங்கிருந்தோ ஒரு தன்னம்பிக்கையும் அவனுள் துளிர்க்கிறது. இத்தன்னம்பிக்கை முத்தமிழ் விரும்பியின் கவிதைகளின் தனித்த பண்பாகும்.*

*யார் மீதும்*
*புகாரில்லை கண்ணம்மா*

*ஆனால் என் மீது*
*புகார்களுண்டு*

என் மீது வருத்தங்களுண்டு

நான் ஒன்றும் கனவுகளுடன் வாழ்பவனில்லை

தோற்றவனில்லை
ஆனாலும் வென்றவனில்லை.

இக்கவிதை வரிகள் ஏன் அவள் வந்து அவனைச் சந்திக்கவில்லை என்று அவன் புகார் கூறவில்லை. ஆனால் மனதுக்குள் வருத்தப்படுகிறான். அவள் வராததால் காதலில் தோல்வி அடைந்துவிட்டானா என்றால் இல்லை என உறுதி படச் சொல்கிறான்.

தோற்றவனில்லை
ஆனால்
வென்றவனில்லை (ஓர் இதழையாகிலும்,
**உன்னோடு உரையாடுதல்**)

என்று சொல்லும்போது வெற்றி இன்னும் என் கைக்கு எட்டவில்லை என்பது தான் இன்றைய யதார்த்த நிலை. இந்நிலை மாறும். இது தான் நிரந்தரம் என்றாகி விடாது. அவள் வருவாள் என்ற நம்பிக்கை உண்டு அதனால் தோற்கவில்லை. ஆனால் இன்னும் வெற்றி பெறவில்லை அது கைக்கெட்டும் தூரம் தான் என்ற நம்பிக்கையில் வாழ்கிறான். கஜினி முகமதுவைப் போல ராபர்ட் ஃபிராஸ்ட்டைப் போல தொடர் முயற்சியால் வெற்றி கிட்டும் என்ற ஆக்கப் பூர்வமான சிந்தனையை முத்தமிழ் விரும்பி தனது கவிதைகளில் விதைக்கிறார்.

## இல்லாதது – இருந்தது

அவன் காத்திருந்தும் அவள் வரவில்லை. அவனால் எதையும் முடிவாகப் புரிந்துகொள்ள இயலவில்லை என்ற சூழலில் அவன் அவளை நோக்கி,

*அள்ளியெடுத்துப் போ*
*இல்லை*
*கிள்ளியெறிய வா*

*இல்லாத வானம்*
*இருந்தென்ன*
*ஊசல் (இல்லாத வானம், **உன்னோடு உரையாடுதல்**)*

*என்ற வரிகளில் இரண்டு முரண் சுவை பகுதிகள் உண்டு. கைகளால் என்னை அள்ளி எடு இல்லையெனில் உன் விரல்களால் என்னைக் கிள்ளி எறி என்கிறான். அவளிடம் அவன் இரண்டில் ஒன்றைச் சொல்லி விடு எனக் கேட்கிறான். அடுத்து இன்னும் வருத்தத்துடன் வானமே இல்லாத போது ஊஞ்சல் இருந்து என்ன பயன்? அதில் அமர்ந்து எங்கு ஆடுவது? ஆட இடம் எங்கே இருக்கிறது? என்று அவன் கேள்வி எழுப்பும் போது அவனுள்ளத்தின் சோர்வு புலனாகிறது. அவளைப் பரந்த வானமாகவும் அந்த வான எல்லையில் ஆடிக் களிக்கும் ஊசலாகத் தன்னையும் அவன் கற்பனை செய்ததும் உணர்ந்து இன்புறத்தக்கது. இந்தக் கவிதையில் இல்லாதது வானம் என்றும் இருப்பது ஊசல் என்றும் முரண்பட சொல்லிய நயம் பாராட்டற்குரியது.*

### மௌனம் – கதறல்

*அவன் எத்தனையோ வழிகளில் அவளைக் காண முயன்றும் பேச முயன்றும் பலனில்லை. அவளிடம் அலைபேசியில் பேசலாம் என்று துடிக்கிறான். அவள் அதிலும் சிக்கவில்லை. அவளது மௌனம் அவனை வதைக்கிறது.*

*உனது சூழல்*
*மௌனம்*

*எனதோ*
*கதறல் (எங்கும் உன் ஆட்சி, **உன்னோடு உரையாடுதல்**)*

*என்கிறான். அவள் மனதுக்குள் போராடுகிறாள். இவன் வாய் விட்டுக் கதறுகிறான். இருவரது எண்ணமும் ஒன்றாக இருப்பினும் பரிமாறிக் கொள்ளத் தயங்குகின்றனர். காதலை வார்த்தைகளாலும் வெளிப்படுத்த முடியாத சூழளில் மௌனமும் கதறலும் இடம்பெற்றது.*

**நெருக்கம் – விலகல்**

*அவள் அவனைக் காதலிக்கவில்லை என்றும் சொல்லவில்லை. காதலிப்பதாகவும் சொல்லவில்லை. அவள் விலகவுமில்லை நெருங்கவுமில்லை.*

*நெருங்கவும் விட மாட்டாள்*
*நெருங்க விடுவதில்லை*
*விலகவுமில்லை என்கிறாள்*

*ஓர் உறவுச் சட்டத்தில்*
*நிற்கிறாள் [ஊசலாட்டம்,* ***பார்வையில் பூத்த நிலா****]*

*என்ற வரிகளில் நெருக்கமும் இல்லை விலகலும் இல்லை என்ற முரண்பாடு முடிவெடுக்க தெரியாத இடர்ப்பாடு கவிதைக்கு முரண் சுவையை வழங்குகிறது.*

*அவள் பேசாமல் இருப்பதால் மனம் வெதும்பிய காதலன் அவளிடம்*

*நீ*
*நிசமாகவே*
*பேசப் போவதில்லையா*
*நீளுகிறது*
*பகலா?*
*இரவா?*
*தொலைவா? [நிசமாகவே,* ***பார்வையில் பூத்த நிலா****]*

*என்று தனக்குத் தானே கேட்டுக்கொள்கிறான். ஒவ்வொரு நாளும் அவளுடைய ஒற்றைச் சொல்லுக்காகக்*

*காத்திருக்கும் வேதனையால் அவனது பகலும் இரவும் நீண்டு கொண்டே போகிறது. அவனுக்கு பகலும் புரியவில்லை இரவும் தெரியவில்லை அவை வெகு தொலைவு போய்விட்டன. இரவுக்கும் பகலுக்கும் பேதமறியாப் பொழுதுகளை அவன் களிக்கிறான். ஒவ்வொரு நொடியும் அவள் நினைவாகவே இருக்கிறான். ஆனாலும் அவளை விட்டு வெகு தொலைவு வந்து விட்டதைப் போல் உணர்கிறான். இந்த முரண் சுவை இக்கவிதை வரிகளில் அழகுற எடுத்தியம்பப் பட்டுள்ளது.*

*அவளிடம் பேச வேண்டும் என்ற ஆசையால் பேசப் போனவன் பேச இயலாமல் தடுமாறுகிறான்,*

*உரையாடல் விழைய*
*மெல்ல*
*உரசுகின்றன*
*சிக்கிமுக்கிக் கற்கள்.*

*தீ மூட்டலும்*
*நீராட்டலுமாய்*
*எழுந்து விரைகின்றன*
*சொற்கள் (மெல்ல உரசுகின்றன,* ***உன்னோடு***
***உரையாடுதல்****)*

*என்ற வரிகள் அவனது படபடப்பை தீ மூட்டலாகவும் பேசத் துணிந்து திருவாய் மலர்வதை நீராட்டலாகவும் காண்கின்றன. இத்தகைய முரண் சுவை அவனது உணர்ச்சி வேகத்தையும் செயல்பாட்டையும் வாசகர் அழகுறப் புரிந்துகொள்ள உதவுகின்றது.*

### *பகல் - குளிர்*

*இருவருக்கும் ஏக்கத்தால் தூக்கமில்லை. சந்தித்தால் துக்கமில்லை. சந்திப்பு நிகழ்ந்த போது*

*மலர்ந்தன*
*மனசுகள்*

*நிமிடங்கள் ஒளிரும்*
*பகலிலும் குளிர் (மலர்ந்தன மனசுகள்,* ***உன்னோடு உரையாடுதல்)***

*என்ற கவிதை வரிகள் வெயிலடிக்கும் பகல் வேளையில் இக்காதலர்களுக்கு மட்டும் குளிர்ந்த நிலவொளி விசுவது போல் இருக்கும். அதனால் அவர்களுக்கு பகலிலும் குளிரெடுக்கிறது. ஆக இயற்கையை வெல்லும் சக்தி படைத்தது இந்தக் காதல்.*

*ஏராளமான கவிஞர்கள் முரண் சுவையை தமது கவிதைகளில் புகுத்தினர். குறிப்பாக மாயா ஏஞ்சலோ என்ற பெண் கவிஞர் தன்னுடைய காதல் கவிதை ஒன்றில் முரண் சுவையை அழகுறக் கையாண்டிருப்பார். இருவரது தோலில் காணப்படும் முரண்பாட்டைச் சுட்டிக்காட்டிய பின்பு உனது முடிவின் தொடக்கத்தையும் எனது தொடக்கத்தின் முடிவையும் எடுத்துக் காட்டுகிறது என்பார்.*

*PASSING TIME*
*Your skin like dawn*
*Mine like musk;*
*One paints the beginning*
*Of a certain end.*
*The other,*
*The end of the sure beginning.*

*இவ்வாறாக இன்னும் பல முரண் சுவை கொண்ட கருத்துக்களும் சொல்லாடல்களும் கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் நிறைய கிடைக்கின்றன. நூலின் விரிவு கருதி சில மட்டுமே இங்குக் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளன. வாசகர் தம் அனுபவத்தால் இன்னும் பல அருமையான முரண் சுவை பகுதிகளை படித்து உணர்ந்து மகிழலாம்.*



